


# நகரத்தார்

திங்கள் இதழ்

61, D, உசுமான்சாலை - சென்னை-17

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

சாதாரண-மாசி பிப்ரவரி-1971

ஆசிரியர் புலவர்நாகசண்முகம்

பரிந்துரையாளர் எஸ். பிஎல். பழநியப்பா பி.ஏ., பி.எல்.

குறிப்பு இரண்டு — பேரேடு இரண்டு


# தேர்தலும் நாமும்

பொது உண்மைகள் காலத்தால் மாறுவதில்லை. புதுமை எத்தனை நேர்ந்தாலும் அந்த உண்மைகள் புதுப்பெயர்களைப் பெறு கின்றனவே தவிர அழிவதில்லை.

உலகம் ஒரு குடும்பமாக வாழவேண்டும் என்று மனிதகுலத்தால் உணரப்பட்ட உண்மை இன்று பூத்ததல்ல. நேற்று முளைத்ததல்ல. நேற்று முந்நாள் வித்திடப்பட்டதல்ல.

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**

என்ற புறப்பாட்டு அடி இந்த உண்மையை மிகநாகரிகமாகப் புலப் படுத்தியிருக்கிறது.

இத்தொடரில் உள்ள பொதுமை நோக்கத்தின் சிறப்பையும் புலவர் கூறி உள்ள நயத்தையும் பற்றி விவரிப்பதல்ல இப்பொழுது நம் நோக்கம்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இந்த ஒப்புயர்வற்ற கருத்தை கூறிய புலவர் பிறந்த புனித மண் யாது? என்பதைத் தான் நாம் குறிப்பிட விரும்புகிறோம். இந்தப் பாடலை இயற்றிய கணியன் பூங்குன்றன் நகரத்தார் சீமையில் உள்ள பூங்குன்ற நகரில் (இன்று இராமநாதபுரம் மாவட்டத்தில் விளங்குகின்ற மகிபாலன் பட்டி) தான் உதித்தார்.

பாண்டிநாட்டின் அறிவு தோய்ந்த சூழ்நிலைதான் அங்கு சங்கங் கள் பிறக்க ஏதுவாயின.

சோழநாட்டின் வளமிக்கச் சூழ்நிலைதான் கற்களே இல்லாத மருதநிலப் பகுதியில் கோட்டைகள் அனைய கோயில்கள் தோன்ற ஏதுவாயின.

செட்டியார் சிமையின் பொதுமை நோக்கம்தான் பூங்குன்றத்துப் புலவரை இவ்வாறு பாடச் செய்தது என்று கூறுவது தவருகுமோ?

காவிரிப்பூம்பட்டிணத்தில் நாளங்காடி அல்லங்காடி என வழங்கிய பகல் இரவுக் கடைத் தெருக்களுக்கு யவன வணிகர்கள் எல்லையின்றி வந்து தமிழகத்துப் பொருட்களை கொள்ளை கொள்ளை யாக வாங்கிச் சென்றனர் – அந்நகரில் பலர் நிலையாகவும் வாழ்ந்து வாணிபம் செய்தனர், என்ற வரலாற்றை அறிந்து நாம் மகிழ்கிருேம் – போற்றுகிருேம். தமிழகத்து வணிகர்களான நகரத்தார்கள் கடல் கடந்து சென்று வாணிபம் செய்தது மட்டும் எவ்வாறு குறுகிய நோக்கமாகிவிடும். இது போன்ற முறையற்ற நம் சிறப்பை அறியாத வருணனைகளுக்குக் காரணம் நம் மரபினரிடையே உள்ள ஒற்றுமைக் குறைவும் அரசியல் விழிப்பு இல்லாக் குறையுமே யாகும்.

உலக ஒருமைப் பாட்டிற்கு ஞானிகள் எந்த அளவு பெருமைக்கு உரியவர்களோ அந்த அளவு வணிகர்களும் பெருமைக்குரியவர்கள். முன்னவர்கள் அருள் வேண்டி உலகைக் கண்டனர். பின்னவர்கள் பொருள் வேண்டி உலகைக் கண்டனர்.

மரக்கலங்கள் மாபெரும் கப்பல்கள் ஆனதற்கும் ஒருசில மணிகளில் நாடுவிட்டு நாடு செல்கின்ற மிகப் பெரிய விமானங்கள் தோன்றியதற்கும் தொழில் துறைகள் காரணமாகும் என்ருல் மிகை ஆகுமோ ?

பொதுமை நோக்கத்தில் நம் மரபினர் யாருக்கும் சளைத்தவர்கள் இல்லை என்பதற்கு நம்மவர்கள் செய்துள்ள காலத்திற்கேற்ற அறப் பணிகளே மிகப் பெரிய சான்றுகள். நம் உரிமைகளை நாம் கேட்பது குறுகிய நோக்கமாகாது. நாம் எண்ணிக்கையால் சிறுபான்மையினர் என்ருலும் நாட்டில் இன்றியமையாத தொழில் துறையில் மிகப் பெரும்பான்மைப் பங்கு உடையவர்களாக விளங்குகின்ருேம். அரசியல் மாற்றங்களால் ஏற்படுகின்ற விளைவுகள் நம் இனத்தை வெகுவாகப் பாதிக்கின்றன. உதாரணமாக வங்கிகள் தேச உடமை ஆக்கப்பட்டதால் தொழில் துறையில் பெருந்தேக்கத்தையும் நம் இளைஞர்களுக்கு பெருவாரியான அளவு வேலை வாய்ப்பற்ற தன்மை யையும் நாம் பெற்ருேம்.

வங்கிகள் நாட்டுடமை ஆக்கப்பட்டது சரியா? தவரு? என்பதல்ல நம் வாதம். அதனுல் ஏற்படுகின்ற விளைவுகளால் நம் இனம் பாதிக்கப்பட்டால் அதற்குக் குரல் கொடுக்க நம்மவர்கள் வேண்டும். மன்னர்பின்னேராக இருந்துபெருமை பெற்றது மன்னராட்சிக் காலத் திற்கு பொருத்தமுடையதாக இருந்தது. மக்களாட்சிக் காலத்திலும் நாம் பின்னேராக இருக்கவேண்டும் என்பதில்லை. எனவே நம் குறைகளை அரசுக்கு எடுத்துச் சொல்ல நம்மவர்கள் சிலரை நாம் சட்டசபைக்கு அனுப்பவேண்டும்.

திருப்பத்தூர், திருமயம், சிவகங்கை ஆகிய சட்டமன்ற தொகுதி களும் அவற்றை உள்ளடக்கிய புதுக்கோட்டை, சிவகங்கை பாராளுமன்றத் தொகுதிகளும் நம்மரபினர் வாழும் பகுதிகளாக உள்ளன.

இத் தொகுதிகளில் நம்மவர்கள் நின்ருல் தவருமல் ஒற்றுமை யோடு அவர்களை ஆதரிப்பது என்றும் நம்மவர்கள் நிற்காத தொகுதி களில் நம்மை வெறுக்காதவர்களாகவும் நம் குரலுக்கு மதிப்புக் கொடுப்பவர்களாகவும் விளங்குபவர்கள் யார் என்று பார்த்து அவர்களை ஆதரிப்பது என்றும் நாம் ஒரு மனதாக முடிவு செய்து கொண்டு செயலாக்குவோமாக.

# கருணை உருவான கருமாரி அம்மன்

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்குகிருள் திருவேற் காட்டிலே கோயில்கொண்டிருக்கும் கருமாரி அம்மன். நம்மரபின ருக்கும் நாட்டிற்கும் எல்லா நலன்களும் பெருக அவள் மலரடி தொழுது அவள் திருவுருவப் படத்தினை இந்த இதழின் அட்டைப் படமாக வெளியிடுகின்ருேம்.

அருட் கவிஞர் அரங்க சீனிவாசன் அவர்கள் இயற்றி, சென்னை, அன்னை நிலையத்தார் வெளியிட்டுள்ள கருமாரி அம்மன் அந்தாதி என்ற நூலிலிருந்து மூன்று பாடல்களைக் கீழே தருகின்ருேம்.

நயம்தரும்; கல்விநலம்தரும்; ஞானம்
நயந்துதரும்;
வயம்தரும்; நல்லமனம்தரும்; செல்வ
வளம்தரும்; புண்
ணியம்தரும்; வாழ்வில்இதம்தரும்; மேனி
எழில்தருமால் —
வியந்தரு மாதவர்சூழ்கரு மாரியின்
மேன்பதமே.

சந்தத்தமிழா? பலகலையா? தலை
மைத்திருவா?
தங்கக்குவையா? மணிமாடமா? தனி
யூர்திகளா?
சிங்கத்திறலா? எதுவேனினும் எளி
தேபெறலாம்
துங்கப் புகழ்க்கரு மாரியந்தாதியைச்
சொல்லிடினே.

தெய்வம்பல் கோடியுண்டேனும், 'முனிவர்க்கும்
தேவர்க்குமே
கைவந் திடவரம்நல்கும்' என்ருேமறை
காட்டிநிற்கும்
மெய்வந்த அன்னைகருமாரி தன்னிடம்
வேண்டிநின்ருல்
ஐயம்கெட அருள்வாள்பேதம் இன்றி
அனைவர்க்குமே.



மதிப்பிற்குரிய அன்னை

## செட்டிநாட்டரசி

## உயர்திரு. ராணி லேடி மெய்யம்மை ஆச்சி

*1905* அக்டோபர் *11*-ஆம் நாள் — *1970* மார்ச் *1*-ஆம் நாள்

சென்ற ஆண்டு இதே தினம் (*1-3-70*) எங்களை விட்டுப் பிரிந்து ஆனால் என்றும் எங்கள் நெஞ்சை விட்டகலாமல் நிலைத்திருக்கும்

கொடைவள்ளல்

**மாண்புமிகு செட்டிநாட்டரசியாருக்கு**

வணக்கம் செலுத்தி

அன்னார் ஆற்றிவந்த நற்பணிகளைத் தொடர்ந்து மேற்கொள்வதென உறுதி பூணுகிறோம்.

பின்கண்ட நிறுவனங்களின் நிர்வாகத்தினரும் பணியாளர்களும்

ராணி மெய்யம்மை உயர்நிலைப்பள்ளி, காந்திநகர், சென்னை.
ராணி மெய்யம்மை பெண்கள் உயர்நிலைப்பள்ளி,
ராஜா அண்ணாமலைபுரம் சென்னை.
செட்டிநாடு கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிமிடெட்.
மதுரை சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிமிடெட்.
சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிமிடெட்.
சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (திருவாங்கூர்) பிரைவேட் லிமிடெட்.
லோட்டஸ் மில்ஸ் லிமிடெட்.
ஸ்ரீ கருணாம்பிகை ஜின்னிங் பேக்டரி.
டுபாரி குரூப் எஸ்டேட்ஸ்
மேபிளவர் எஸ்டேட்.
தொட்லக்கூண்டா எஸ்டேட்.
சேஷகிரி எஸ்டேட்.
சூண்டல்லி எஸ்டேட்.
கொடகிபைல் எஸ்டேட்.

# அன்னை புகழ் வாழி

ஒளியாய் உயர் அருளாய் விளங்கிய செட்டிநாட்டு ராணி மெய்யம்மை ஆச்சி அவர்களின் ஓராண்டு நினைவு நாள் அண்மை யில் வர இருக்கின்றது. அதனை ஒட்டி அவர்களுடன் நெருங்கிப் பழகிய தாய்க்குலத்துப் பெரியவர்கள் சிலரின் அன்புக் கருத்துக் களையும் மற்றும் பெருமக்கள் சிலரின் கருத்துக்களையும் பெருமிதத் துடன் வெளியிடுகின்றோம்.

# அறத்தின் உருவம்

என் தங்கை ராணி மெய்யம்மை அவர்களைப்போல் பூவுலகில் காண்பது அரிது. பிறருக்கு நல்லதை எல்லாம்செய்து, அவர்களைப் பூரிப்படையச் செய்வது, அவர்களுடைய சுபாவம். இது அவர் களுக்கு இறைவன் அளித்த பெரும் பொக்கிஷம். இதை, எல்லா ராலும் செய்யமுடியாது. ஏனென்றால் அப்படிச் செய்வதற்கு நல்ல மனம் வேண்டும், திறமைவேண்டும், ஆள்பலம் வேண்டும்; பொருளும் வேண்டும். அரசரைக் கணவராக அடைந்த அவர்களுக்கு எதிலும் சிறுகுறைகூட இல்லை.

அவர்கள் மனதிலே நினைத்ததை எல்லாம் நடத்திக்காட்டிய பெருமை அரசரைச் சாரும். அவர்கள் செய்துவரும் தருமம் செய் திருக்கும் தருமம் எத்தனை எத்தனையோ, அவர்களால் முன்னுக்கு வந்து, சீரும் சிறப்புமாக வாழும் குடும்பங்கள் எத்தனையோ ஆயிரம். பள்ளிக்கூடங்கள், கலாசாலைகள், தமிழுக்குச் செய்திருக்கும் தொண்டு, பொதுவாழ்வில் அவர்கள் நம் நாட்டுக்கு ஓர் ஆணிவேர், என்று சொன்னால் மிகையாகாது.

அப்படிப்பட்ட, குடும்பத்துக்கு தற்சமயம் பேரிடிபோல் பல, நிகழ்ச்சிகள் சமீபத்தில் நடந்துவிட்டது. மனைவியை இழந்து, மகனை இழந்து பரிதவிக்கும் நிலை, தெய்வச் செயல் என்று எண்ணி ஆறுதல் அடைய, ஆலவாய் அண்ணலைத் துதிப்பதைத்தவிர வேறு வழி இல்லை.

வருங்காலத்தில் அவர்கள் குடும்பம் அமைதியுற்று பெரு மகிழ் வுடன் நம் சமூகத்துக்கும், மற்றவர்களுக்கும் நாட்டுக்கும் அவர்கள் செய்துவந்த நல்லகாரியங்களைத் தொடர்ந்து செய்துவர, தில்லைக் கூத்தன் திருவருள் புரிவாராக.

அன்புள்ள,

அ. மு. மு. முரு. வள்ளியம்மை ஆச்சி.

# ஒளிதந்த அன்னை

'மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா'

"பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா" என்றான் புரட்சிக் கவிஞன் பாரதி. அவன் கூற்றிற்கேற்ப வாழ்ந்த பெண்மையின் வளமார்ந்த சான்றாய் விளங்கியவர் நம் ராணி, செட்டிநாட்டு அரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள். அவர் வாழ்ந்த வாழ்வின் மாட்சிகள் யாவும் அதனையே மெய்ப்பிக்கின்றன. உயர்ந்த கல்வியும், பரந்த நோக்கமும், பார்போற்றும் பண்பும், கார்மேகமென்னக் கருணை உள்ளமும் படைத்த செட்டிநாட்டு வள்ளல், செம்மல், ராஜா சர் முத்தையா செட்டியாரை வாழ்க்கைத் துணையெனக் கொண்டவர். அருமருந்தன்ன புதல்வர்களை ஈன்றவர்.

தொட்டிலையாட்டிய கை, தொண்டாற்றிய பெருமைதனை என்னென்பது. இருட்டறையில் உள்ளதடா உலகம் என்ற உண்மைதனை உணர்ந்த அன்னார், அறியாமையாம் இருட்டைப் போக்கி, அறிவொளி வீசும், கல்வி நிலையங்களை ஏற்படுத்தினார். அவர்தம் பெயர் தாங்கிய உயர்நிலைப் பள்ளிகள் சென்னை காந்தி நகரிலும், அண்ணாமலைபுரத்திலும் அறிவொளி வீசி, செம்மாந்து செல்லா நிற்கின்றன.

காதலொருவனைக் கைப் பிடித்து, அவன் காரியம் யாவினும் கை கொடுத்தவர் நம் அரசியார். சொந்த நாட்டின் சீர்பாடப் பல மேற்றிசை, கீழ்த்திசை நாடுகளில் பயணம் செய்தார். மேலைநாட்டின் சிறப்புக்குக் காரணம் காணச் சென்ற தம் துணைவருடன் அவரும், மலேயா, சிங்கப்பூர், சப்பான், கனடா, மேற்கு ஜெர்மனி போன்ற பல்வேறு இடங்களுக்கும் சென்று வந்தார். வீட்டுப் பணியால் சிறந்தது போலவே நாட்டுப் பணியிலும் நாட்டம் காட்டிச் சிறப்புற்றார்.

செல்வம் கொழிக்கும் செட்டிநாட்டுச் சீமையிலே வாழும் நகரத்தார் குலத்தில் பிறந்தும் செட்டுப் பார்க்காத சீராளர் அவர். இறைக்க, இறைக்கத்தான் ஊற்றுப் பெருக் கெடுக்கும் என்ற இயற்கையின் உண்மைநிலையை உணர்ந்தவர். உணர்ந்த உணர்வு, ஈத்துவக்கும் இன்பத்தை நாடத்தூண்டியது. தூண்டுதல் செயலாக மலர்ந்தது. அம்மலர்ச்சியில் மணம் பெற்றுச் சிறந்தன பற்பல குடும்பங்கள். அழியும் செல்வத்தைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் சிறிதுமில்லாது, பல்வேறு குலத்தார்க்கும், இனத்தார்க்கும் பேருதவிகள் செய்து அழியாப் புகழடைந்தார் இவ்வம்மையார். செல்வத்துப் பயனே ஈதல் தானே? அவர்தம் பெருங்குணமே இன்று அவரைப் பற்பல குடும்பங்களின் தூண்டா மணிவிளக்காய்ச் சுடர்விட்டு ஒளிரச் செய்கின்றது.

அன்பும் அறனும் தம்மிரு கண்களென வாழ்ந்த அவ்வம்மையாருக்கு, நாம் செய்ய வேண்டியது, அவர்வழிச் செல்வதனைத் தவிர வேறென்ன இருக்கின்றது.

உ. அ. பெரி. மு. அரு. சீதாலெட்சுமி ஆச்சி.

# எழில்குண இராணியார்

உலகம் போற்றும் திருவள்ளுவர் இல்வாழ்க்கையின் நலம் குறித்து நன்கு கூறுவார். அறம் செய்வதற்குரிய நிலைகளில் இல்லாளோடு கூடி வாழ்தலின் சிறப்பினைப் புலப்படுத்தவே இல்லற இயலில், இல்வாழ்க்கை முதலாவதாகக் கூறப்பட்டது. அடுத்து வாழ்க்கைத் துணை நலம். இங்ஙனம் அமைந்த குடும்பப் பாசம் அனைத்துலகப் பாசமாகப் பரிணமிக்கிறது. எனவே இல்லாள் தனது கடமையை நன்கு உணர்ந்து அதற்கேற்பச் செயல்பட வேண்டும். குடும்பத் தலைவனும் தலைவியும் ஒருமனப்பட்டுச் செயல்புரியின் அதன் சிறப்பே தனி. அவ்வாறு ஒன்றிச் செயல்படின் குடும்ப ஏற்றம்மிகும். இது ஒவ்வொரு குடும்பத்திற்கும் பொருந்தும். அதிலும் பெருவளமுள்ள குடும்பத் தலைவன், தலைவி ஒற்றுமையுடன் ஒருவரை யொருவர் புரிந்துகொண்டு தக்கவாறு சரிப்படுத்திக்கொண்டு செல்வதினால் அவர்களும் அவர்களை அண்டினோரும் நலமுறுவர்.

இத்தகைய பண்பாட்டின் கொள்கலமாக விளங்கியவர், மறைந்த செட்டிநாட்டு இராணி மெய்யம்மை ஆச்சியவர்கள். தமது பன்னிரண்டாவது வயதில் செட்டிநாட்டு அரசர் ராஜா சர் முத்தையா செட்டியாரைத் திருமணம் புரிந்துகொண்டார். கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள் இல்வாழ்விலும், பொதுவாழ்விலும் தம் கணவருக்கு உறு துணையாக இருந்தார். வாழ்க்கையின் மிக உயரிய நிலையில் இருப்போருடன் நாளும் தொடர்ந்து பழக நேரிடும்; அவர்களை உபசரிக்க நேரிடும்; அலுப்பின்றித் தம் கடமைகளைத் திறம்படச் செய்வார்கள். அதேசமயம் ஏழை எளியவர்பால் காட்டப்படவேண்டிய கருணை, பரிவு இவற்றை அணுவேனும் குறைத்துக் கொள்ளமாட்டார். தம் கணவரிடம் அவர்களுக்காகப் பரிந்து பேசுவார். ஈகையும் பெருந்தன்மையும் கொண்ட உள்ளத்தவர்.

'இராணி' அவர்களை நான் காணும்பொழுதெல்லாம் என் நலன் குறித்தும் அன்புடன் விசாரிப்பார்கள். என் அருமைத் தந்தையார் நிறுவிய கல்வி அற நிலையங்கள் குறித்தும் வினவி, அவை அனைத்தும் செழித்தோங்க வேண்டும் என்றும் வாழ்த்துவார்கள்.

இல்லத்து அரசியாகவும், செட்டிநாட்டு இராணியாகவும் திகழ்ந்த திருவாட்டி மெய்யம்மை ஆச்சியாரின் நினைவு அவருடன் பழகிய ஒவ்வொருவரின் நெஞ்சிலும் பசுமையாக நிலவும். அரசரும் இராணியும் இணைபிரியாத் தம்பதிகளாகக் காட்சி தந்தனர். அவர்களின் பரஸ்பர அன்பு அதிசயிக்கத்தக்கது.

இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் மறைந்து ஓராண்டு ஓடிவிட்டது. அவர்கள் காட்டிச் சென்ற நற்பண்புகளை நாம் பின்பற்றி நடந்து மேம்பாடு அடைவோமாக!

உமையாள் இராமநாதன்

செயலர். அழகப்ப செட்டியார் கல்வி அறநிலையக் குழு

# கொடை உள்ளம்

செட்டிநாட்டு அரசி மெய்யம்மை ஆச்சியை நான் நீண்ட நாட்களாக அறிவேன். அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு அவர்களுடைய பெருந்தன்மை, அன்பு, குழந்தை உள்ளம் இவைகள் நன்கு புலனுகும். சமீபத்தில் ராமேஸ்வரத்தில் புயல் சேதம் ஏற்பட்டுப் பல குழந்தைகள் அனுதரவாக நின்றபோது நான் சமூக நல போர்டின் தலைவியாக இருந்தேன். ராமனுதபுரம் ஜில்லாவின் பிரதிநிதியான ஸ்ரீமதி அன்னபூரணி வீரப்பனும் நானும் செட்டி நாட்டு அரசியிடம் இந்த குழந்தைகளுக்கென ஒரு விடுதி செட்டி நாட்டிலேயே துவக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்ட உடனேயே தன் வீட்டையே அதற்களித்து ஊக்கத்துடன் அந்த இல்லம் துவக்க பேருதவி செய்ததை நான் மறக்கவே முடியாது.

மிகப் பெரிய அளவில் நடந்த செட்டிநாட்டரசரின் சஷ்டிஅப்த பூர்த்தி விழாவில் எனக்கு பெருமதிப்பு கொடுத்து அம்மா நல்லா பேசுவார்கள் என்று எல்லோரிடமும் புகழ்ந்து தன் அருகில் அமர்த்தி போட்டோ எடுத்தது மட்டுமல்ல அதை நினைவுவைத்து எனக்கு அனுப்பிவைத்தார்கள். எந்த பொது இடத்தில் எத்தனை கூட்டம் இருந்தபோதிலும், புன்சிரிப்புடன் சிறியவர்களையும் மதித்துப் பேசும் பண்பு உடையவர்கள்.

எப்பொழுதும் வெளியே சென்ருல் காலை தூக்கி வைக்க ஒரு பென்சு வைத்து பழக்கப்பட்டவர்கள். ஒருமுறை தமிழ் இசை விழாவில் என் தகப்பனுர் பக்கத்தில் உட்கார நேர்ந்தது. வழக்கம் போல் பணிஆள் பென்சு கொண்டுவந்தான். அதை யாரும் அறியாத வகையில் வேண்டாம் என்று மறுத்துவிட்டார்கள். காரணம் என் தகப்பனுர் பக்கத்தில் காலை உயர தூக்குவது மரியாதை குறைவு என்று. இத்தகைய உயர்ந்த பண்பும், அடக்கமும், அன்பும் பொருந்திய அம்மையார் தமிழகத்தின் பல அன்பர்களின் பாராட்டுக்குரியவர்கள் என்பதில் ஐயமில்லை.

இதைப் போல பல ருசியான அனுபவங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் தக்க வகையில் மரியாதையும் அன்பும், இரக்கமும் வாரி வழங்கினுர்கள். இன்று அவர்களைப் பிரிந்து அவர்களின் குடும்பம் மட்டுமல்ல, ஏனைய பல அன்பர்கள் வருந்துகிருர்கள் என்று சொல்லவும் வேண்டுமா? அவர்கள் ஆன்மா சாந்தி அடையவும், செட்டிநாட்டரசர் அவர்களுக்கு இறைவன் நல்ல தேகபலத்தையும், உறுதியையும் அளிக்கவும் நாம் பிரார்த்திப்போமாக.

சரோஜினி வரதப்பன்

# அரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள்

செட்டிநாட்டு அரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள் அன்பிற் சிறந்து விளங்கினுர்கள். நகரத்தார் சமூகப் பெண்கள் வாழ்வில் சிறந்து விளங்க நற்பணிகள் பல புரிந்தார்கள். ஈகைக் குணம் மிக்க அவர்கள், பிறர்க்கு உதவி புரிவதையே தம் வாழ்க்கையின் குறிக் கோளாகக் கொண்டிருந்தார்கள். அரசி மெய்யம்மை ஆச்சி அவர் களுடன் பலமுறை உரையாடும் வாய்ப்புக் கிடைத்ததை என் நற்பேறு என்று கருதி மகிழ்கின்றேன். அரசி அவர்களுடன் நெருங்கிப் பழகியதால் அவர்களின் இனிய பண்புகளை நன்கு உணர்ந் தேன். உண்மைகளை மறைக்காமல் நேரில் கூற வேண்டும் என்பது அரசி அவர்களின் சிறந்த கொள்கைகளுள் ஒன்ருகும். அப்படி, உண்மைகளை மறைக்காமல் நேரில் கூறுபவர்களை அவர்கள் பெரிதும் மதித்துப் போற்றுவார்கள் என்பதையும் நான் நன்கு அறிவேன்.

அரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள் எதைத் தொட்டாலும் தொட்டது துலங்கும் என அரசர் அவர்கள் அடிக்கொருமுறை கூறி மகிழ்வார்கள். திருமகளின் அருள்பெற்றுத் திகழ்ந்து செல்வ வளம் பெருக்கிய அரசி அவர்கள் இறைவன் அடி சேர்ந்து ஓர் ஆண்டு ஆவதை நினைந்து நாம் அனைவரும் பெருந்துயரில் ஆழ்கின்ருேம். மனைத்தக்க மாண்பு உடையராகிக் குலப்புகழ் வளர்த்து பெண் ணினத்தின் பெருமையை உயர்த்திய அரசி அவர்களின் விழுமிய பண்புகளைப் போற்றி வளர்ப்பதே நாம் அவர்க்குச் செய்யும் கடமையாகும்.

அலமேலு சுந்தரம்
மீனுட்சி நூற்பு ஆலை—மதுரை

# அன்பு வடிவான அன்னை

காதலன் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவிலும் கைகொடுத்து என்னும் பாரதியாரின் வாக்குப்போல் இராணி மெய் யம்மை ஆச்சி அவர்கள் (இராஜா) துணைவரின் மனம்போல் நடந்து அத்துடன் பெண் குலத்தின் பெருமையை நிலைநாட்ட பல மணப் பெண்களுக்கு உடை, உணவு, பொருள் உதவி அவரவர்கள் செய லுக்குத் தக்கபடி உதவி செய்து வந்துள்ளார்கள். நம் தன வணிக சமூகத்தில் எளிய மக்கள் திருமணம் ஆகாமல் இருப்பவர்களுக்கும், அதேபோல் மேற்படி ஆடவர்க்கு இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் செய்த உதவி மறக்கவோ மறுக்கவோ முடியாது. அவர்க ளிடம் இருந்த அலுவலர்களுக்கு அவர்கள் செய்த உதவி நிரம்பிய தாகும். அம்மையார் அவர்களின் சாந்தியின் போது ஏழைப் பிள்ளை களின் விடுதி ஒன்றும், சீத்தா மாதர் சங்கத்தின் சார்பில் ஏழைக் குழந்தைகள் விடுதியையும் ஆரம்பித்து வைத்தார்கள். அந்தக் குழந்தைகள் விடுதியும் மிக நன்ருக நடப்பதுடன், குழந்தைகளும் ஐந்தாண்டு காலத்தில் படிப்பிலும், ஒழுக்கத்திலும் மிக மிக வளர்ச்சி யடைந்து வருகிருர்கள். அவர்கள் திறந்து வைத்த சீத்தா மாதர் சங்கமும் நன்கு வளர்ச்சிடைந்து வந்திருக்கிறது. தன வணிகச் சமூகத்தில் பிறந்த பெண்கள் சங்கத்திற்கு வந்து பயிற்சி பெற்று செல்கிருர்கள். அவர்கள் பெயர் என்றும் ஒலிக்கும்.

மஞ்சுளாபாய்வைசு
காரைடுகாத்தான்.

# வாழ்வரசி

திருமதி ராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் பிறந்த வீட்டுக்கும் பெருமை தந்து, புகுந்த வீட்டுக்கும் பொன்னொளி தந்த பொற்கொடி ஆவார்கள். "ஒன்றாக உலகத்து உயர்ந்த புகழல்லாற் பொன்றாது நிற்பதொன்றில்" என்று தெய்வப்புலவர் அருளியபடி அகில உலகமும், தம்மையும், தம்மரபையும் அறியும் வண்ணம் வாழ்ந்து காட்டிய வள்ளல், பார்புகழப் பல்கலைக்கழகம் கண்ட செம்மல், இசையில் தமிழ் மொழியை ஏற்றிய ஏந்தல், தில்லை நடராஜனைச் சிந்திக்கும் செல்வர், செட்டி நாட்டரசர் திரு. அண்ணாமலையாரை மாமனாராகவும் பெண்ணலமெலாம் ஒருங்கமைந்து பேரரசியாகத் திகழ்ந்த சீதை யாச்சியை மாமியாராகவும் பெறும் பேறு பெற்றவர், திருமதி மெய்யம்மை ஆச்சி அவர்கள் என்றால் அது மிகையாகாது. சமுதாயத்தில் ஓர் உன்னத ஸ்தானம் வகிக்கும் செட்டிநாட்டரசர் குடும்பத்தில் தந்தைக்கேற்ற தனயனாக, வள்ளற் சிறப்புடன் வாழ்ந்துவரும் திரு மிகு டாக்டர் ராஜா சர். முத்தையா செட்டியாரவர்கட்கு வாழ்க்கைத்துணைவியாக அமைந்தார் பொன் குடத்திற்குப் பொட்டு வைத்தது போல. இறையோனும் உமையுமென எப்பிரானும் செந்திருவுமென அவர்கள் வாழ்க்கை மிகச் சிறந்த வாழ்க்கை ஆகும். திருமதி ஆச்சி அவர்கள் மேற்கொண்டிருந்த தெய்வபக்தி, விருந்தோம்பல், இரக்கம், கருணை, அன்பு, அடுத்தவர்கட்கு உதவி புரியும் பண்பு முதலியவை அளவிடற்கரியதாகும். அன்னாருடன் கூட இருந்து நெருங்கிப் பழகும் பாக்கியம் எனக்கு அதிகம் கிடைத்தது. அவர்களின் குண விசேடங்களைக் கூறுவது என் கடமையாகும். அவர்கள் திருமணங்கள் நடத்தி வைத்தல், புதுமனை விழாக்கள் நடத்திவைத்தல், சமுதாயத்தினரின் பிணக்குகளைத் தீர்த்து சமாதானம் செய்துவைத்தல், அவரவர்கள் குடும்ப நிலைக்கு ஏற்றவாறு அறிவுரைகூறல், இவைகளில் ஆழ்ந்த பேரன்பு உடையவர்கள். தொட்டால் துலங்கும் என்ற பொன்மொழிப்படி, இவர்களால் விளக்கு ஏற்றி வைக்கப்பட்ட குடும்பங்கள் ஏராளம். உத்தியோக உதவி பெற்ற குடும்பங்கள் அநேகம். இன்னும் தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, ஆலயப்பணி, தருமப் பணிகள் ஏராளம், ஏராளம். செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல் என்றபடி வாழ்வாங்கு வாழ்ந்து காட்டிய ஒப்பற்ற பெண்ணரசி திருமதி மெய்யம்மை ஆச்சி அவர்கள். ஒவ்வொரு இரவும் "எல்லோரும் நன்றாய் இருக்கட்டும் மேதினியில்", என்று தில்லை நடராஜனைத் தியானித்த வண்ணம் நித்திரை செய்வது வழக்கம். எங்கள் பால் பேரன்பு கொண்டவர்கள். எங்கள் வீட்டில் நடைபெற்ற விழாக்களுக்கு வருகை தந்து, தங்கள் மனம்போல பெருவிழாவாகச் சிறப்பித்து நடத்தித் தந்ததை என்றென்றும் மறக்கமுடியாது. இப்படிப் பல்லோர் வாழ்த்துவதையும் நான் அறிகின்றேன். இவ்வாறு அழியாப் பெரும்புகழ் பெற்ற திருமதி ஆச்சி அவர்கள் பூவுலகில் அரசியற்றி இப்போது பொன்னுலகில் வாழ்வரசியாக வாழ்கின்றார்கள். அன்னாரின் பெருமை பெறுநினைவானது அவர்கள் குடும்பத்திலும் சமுதாயத்திலும் நாட்டிலும் என்றென்றும் நின்று நிலவும், எதிரொலிக்கும். அவர் புகழ் வாழ்க.

வெண்பா

பூவரிசி யாய்வாழ்ந்து பொன்றாப்புகழ் படைத்த
வாழ்வரசி பொன்னாட்டில் வாழ்கின்றாள் மேவியசீர்
வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வழிவகுத்த
மெய்யம்மை ராணி அம்மை யே.

தெய்வானை கருப்பையா செட்டியார்
ராஜா அண்ணாமலைபுரம், சென்னை 28

# ஒளி உருவானவர்கள்

ராணி அம்மாள் அவர்கள் செட்டிநாட்டுக்கே ராணியாக விளங்கினார்கள். அவர்கள் ஏற்றிவைத்த விளக்கு இன்று பல ஏழ்மைக் குடும்பங்கள் நல்வாழ்வுக்கு ஒளியாக உள்ளது. ராணி அம்மாள் அவர்களோடு நெருங்கிப் பழகி அவர்களுக்குப் பணிவிடை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவர்கள் மிகவும் இளகிய உள்ளம் கொண்டவர்கள். அவர்களை அணுகியவர்க்கு எப்பொழுதும் காரியம் நிறைவேறும். அவர்கள் எதையும் மறைவின்றி நேரடியாகப் பேசுவார்கள். அவர்களது கைராசியை தெரிந்து கொண்டு அனைவரும் அவர்கள் தங்களது விழாக்களிலும், மங்கள நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்ள வேண்டும் என விரும்பி அழைப்பார்கள். அவர்கள் இறந்தது முதல் எனக்கு ஏதோ இருள் சூழ்ந்ததுபோல் உள்ளது. ராணி அம்மா, ராணி அம்மா என அழைக்கும் எங்களது ராணி அம்மாள் புகழ் என்றும் வாழும்.

ஏ ஆர். ராமசாமி
செட்டிநாடு இல்லம், சென்னை-28

# அறச்செல்வி

திருமதி ராணி மெய்யம்மை ஆச்சி அவர்களைப் பன்னிரண்டு ஆண்டுகளாக நான் நன்கு அறிவேன். அவர்கள், எங்கள் குடும்பத்தில் மிக்க அன்பு உடையவர்கள். அவர்களின் நற்குணங்களை நினைக்கும்போது, இத்தகையவர்கள் சிலர் இவ் உலகில் இருந்தால், உலகிற்கு எவ்வளவு நன்மையாக இருக்கும் என்பதைத்தான் முதலில் நினைக்கத் தோன்றுகிறது. அவர்களுடைய உதவியால், ஏழைக் குடும்பங்கள் பல, நன்கு முன்னேறியுள்ளன. அவர்களால் ஆச்சிகள் பலர், பயன் அடைந்திருக்கிறார்கள். தனிமையாக இராமல், எப்போதும் தம்மைச் சுற்றிப் பலர் இருப்பதையே அவர்கள் விரும்புவார்கள். அவர்கள், யாருடனும் ஏற்றத்தாழ்வு இல்லாமல், மலர்ந்த முகத்துடன் அன்பாகப் பேசுவார்கள். அவர்கள் செய்துள்ள தருமங்கள், கணக்கில் அடங்கா. அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கை நடத்துகின்ற ஒருவரே, வாழ முயல்கின்ற பல திறத்தாரிலும் மேற்பட்டவர் என்ற கருத்திற்கு இணங்க, ராணி அம்மாள் அவர்கள், தம் வாழ்நாளில் அறம் செய்வதையே கடமையாகக் கொண்டவர்கள். நகரத்தார் குலத்து ஆச்சிகளுக்கு ஓலைப் பெட்டிகள் முடையும் பயிற்சி உண்டு. அம் முறையில், ராணி அம்மாள் அவர்களுக்கு மிக அழகாக ஓலைப் பெட்டிகள் முடையத் தெரியும். மேலும், அவர்கள் தம் மேற்பார்வையில், பிறரை ஓலைப் பெட்டிகள் முடையச் செய்தும் அழகு பார்ப்பார்கள். அவர்கள், எந்தக் காரியத்தை முன் நின்று நடத்தினாலும் அது, மிகவும் சிறப்புடன் விளங்கும்.

ராணி அம்மாள் அவர்கள், இன்னும் நெடுங்காலம் இருந்திருந்தால், எண்ணற்ற குடும்பங்கள், பயன் அடைந்திருக்கும். அந்த வாய்ப்பு, நமக்குக் கிட்டாமல் போனது, நம்முடைய நற்பேறின்மையே ஆகும். அவர்களுடைய குண நலன்களைப் பற்றிக் கூற எனக்குத் தகுதி இல்லை. ஆயினும் அவர்களுடன் பழகியபோது கண்ட சிலவற்றை நான் கூறியுள்ளேன்.

ராம. மீனாட்சி
செட்டிநாடு ஹவுஸ் குவார்ட்டர்ஸ், சென்னை-28

# அன்புத்தாய் ராணி அம்மாள்

"மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்னும் வள்ளுவன் குறளுக்கு உதாரணமாகத் திகழ்ந்த அன்புத்தாய் ராணி அவர்களின் மறைவு நமக்கும், குறிப்பாகத் தமிழர் இனத்திற்கும் ஒரு மாபெரும் இழப்பாகும். தம்முடைய வாழ்வைப் பொது மக்களுக்காகவே அர்ப்பணித்துக்கொண்டவர்கள் இவர்கள். ராணி அவர்களின் திருஉருவை நம் கண்முன்னே ஒரு நிமிடம் நிறுத்திப் பாருங்கள். "சிரித்த முகம், வழங்கியவண்ணம் இருக்கும் இருகரங்கள், வந்தவர்களை வரவேற்கும் முறை, உபசரிக்கும் விதம், வழியனுப்பும் முறை" இவைகளைத்தான் நாம் காணமுடியும். இத்தகு அருங்குணம் பொருந்திய அந்த அன்புத்தாய் இன்னும் கொஞ்சநாள் நம்மிடையே இல்லையே என்றுதான் நமக்கு மிக வருத்தமாக இருக்கிறது. இருண்டு கிடந்த எத்தனையோ குடும்பங்கள் ராணி என்னும் விளக்கைக்கொண்டு ஒளிவிட்டுப் பிரகாசமாகத் திகழ்கின்றன. செட்டிநாட்டுப் பூங்காவிலே இருந்த ராணி என்னும் ரோஜாவைக் காலன் பறித்துக்கொண்டுவிட்டான். அந்தப் பூங்காவில் உள்ள மற்ற மலர்கள் எல்லாம் "எங்கள் ரோஜா போய்விட்டதே! என்று வாடி வருந்துகின்றன.

வாழ்க ராணி அவர்களின் புகழ்!

வேகுப்பட்டி ந. கனகசபை

## தை இதழ் குறித்துக் குழந்தைக் கவிஞர்

ஓர் ஆண்டு நிறைவுற்று இரண்டாம் ஆண்டில் எழில் நடை போடும் நகரத்தார் வளர்ச்சிக்கு நல்லதொரு பயணம் மேற்கொண்டு, ஆசிரியராகிய தாங்களும் பரிந்துரையாளரும் அமோக வெற்றி பெற்று வருவது குறித்து மகிழ்ச்சி

தொழில்மேதை அரு. அவர்களின் சிந்தனைக்கு விருந்தளிக்கும் சிறந்த உரையை நேரிலே கேட்டு இன்புற்ற பலரில் நானும் ஒருவன். கல்கியும் மஞ்சரியும் போல் நகரத்தாரும் தக்க முறையில் அதனைத் தாங்கி வந்திருப்பது பலரும் படித்துச் சிந்திக்க வாய்ப்பளித்துள்ளது.

தொழில் அதிபர் திரு. சிவலிங்கம் செட்டியார் அவர்கள் ஊர்கள்தோறும் சங்கங்கள் என்ற கட்டுரை மூலம் உருப்படியான பல யோசனைகளைக் கூறியுள்ளார்கள்.

தங்களின் பழனிமலைக் காவடி என்ற தொடர் கதை நம் சமூகத்தவரின் நடை உடை பேச்சு வழக்கை எடுத்துக்காட்டும் சுவைமிக்கப் பழனிப் பஞ்சாமிர்தமாகத் திகழ்கிறது.

நகரத்தார் தொடர்புடைய நான்கு விழாக்களையும் நல்ல முறையில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறீர்கள்.

நகரத்தார் இதழ் மேன் மேலும் சிறந்தோங்க இறைவன் திருவருளை வேண்டுகின்றேன். நன்றி.

அழ. வள்ளியப்பா.



# ஆச்சிகள் உலகம்

தாலாட்டுப் பாக்கள் மிகச் சிறந்த கவிதைகளுக்கு ஒப்பானவை. தாலாட்டுப் பாடுவது என்பது நம் தாய்க் குலத்திற்குக் கைவந்த கலை. எண்ணங்களை வண்ணக் கவிதையாக்கும் நல்ல ஆற்றல் நம் தாய்க்குலத்தின் நிலையான சொத்து என்பதற்கு எடுத்துக் காட்டாக திருமதி ஆர். எம். இலக்குமி அவர்களுடைய சோழர் குலக்கொடி என்ற கவிதை விளங்குகிறது.

ஆர். எம். இலக்குமி அவர்கள் காரைக்குடியைச் சேர்ந்தவர்கள். எம். எஸ். எம். எம். பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் உயர் கல்வி கற்ற அவர்கள், கல்லூரிக் கல்வியினை அழகப்பா கல்லூரியில் கற்று பி. எஸ்சி. (கணிதம்) பட்டம் பெற்றுள்ளார்கள். 1963ல் திரு. என். இராமநாதன் பி. காம். அவர்களை மணந்து கொண்டார்கள். அவர்களுடைய இனிமையும் எளிமையும் பொலிவும் நிறைந்த கவிதையைப் பெருமையுடன் வெளியிடுகின்றோம்.

## சோழர் குலக்கொடி

பொன்னிநதி வெள்ளம்போல் உவகை வெள்ளம்
பொங்கிவரும் ஆடிபதி னெட்டாம் நாளில்
மன்னுபுகழ்க் காவிரியின் கரையோ ரத்தே
மணித்திரளாய்ப் பெருகிவிட்டார் மக்கள் கண்டே
அன்னையெனப் பொன்னியவள் ஆர்த்தெ ழுந்தாள்
அலைக்கரத்தால் நீர்தெளித்தே முகமன் கூறி
மின்னலென விரைந்திட்டாள் நுரைப்பூச் சிந்தி
மேதினியில் இவட்கிடோர் பெண்ணுண் டாமோ!

பூவிரித்த சோலையெலாம் புகுந்து பாயும்
புகழ்விரித்த சோழர்குலக் கொடியாம் அந்தக்
காவிரித்தாய் கரைபுரண்டு ஓடும் காட்சி
கற்பனையால் காணவொண்ணுக் கவினின் ஆட்சி
பாய்விரித்த கரையதனில் மக்கள் கூட்டம்
பாவையரும் காளையரும் கலந்த ஈட்டம்
வாய்விரித்தே பார்த்திருப்பர் நதியின் ஓட்டம்
வல்லியவள் தண்புனலின் இன்ப ஆட்டம்.

சிற்றாருய்ப் பேராருய் அருவி யாகி
சிங்கார நடைபயிலும் ஓடை யாகி
பொற்றும ரைக்குளமாய்ப் பொய்கை மேவி
பூம்புனலின் பலவடிவாய்த் தண்மை தூவி
வற்ருத நீர்வளத்தால் உவகை ஊட்டும்
வளமார்ந்த செல்வியவள் இந்த நாட்டின்
கற்றூர்தம் உள்ளம்போல் தூய நீத்தக்
காவிரியின் புகழ்பாட வல்லார் யாரே?

கங்கையினும் புனிதநறுங் காவி ரித்தாய்
களிகொண்டே துள்ளிவருங் கவினை மாந்தி
அங்கயல்கள் புனலாடும் அழகைக் கண்டே
அங்கயலில் அகமகிழ்வார் அனந்தம் கோடி
பொங்கிவரும் புதுப்புனலில் துளைந்தே ஆடிப்
பூவாடைப் பொன்னியின்பால் உள்ளம் போக்கிச்
செங்கழுநீர் அல்லியொடு ஆம்பல் கொய்தே
சேர்ப்பார்க்குங் குறைவில்லை மகளிர் கூந்தல்.

நீர்க்கரையை வந்தடைந்தே சிறுவர் எல்லாம்
நிற்கின்றார். தமக்குள்ளே புனலைத் தூவி
ஆர்க்கின்றார். ஆற்றுமணல் கரத்தில் ஏந்தி
அழகான சிறுகுடில்கள் அமைக்க எண்ணிப்
பார்க்கின்றார். காகிதத்தில் கப்பல் செய்தே
பன்முறையும் பூம்புனலில் பாய்ந்து உலாவி
வேர்க்கின்றார் வியக்கின்றார். அந்தோ பாவம்
விளையாட்டுச் சிறுகுறும்பிற் கெல்லை உண்டோ!

காதலியர் கடைக்கண்ணால் நோக்க வேண்டிக்
காத்திருக்கும் காளையர்தம் கூட்டம் ஓர்பால்
போதவிழ்ந்த புதுமலரின் எழிலைச் சிந்தும்
பூவையர்தம் இதம்பொழியும் கானம் ஓர்பால்
சீதையர்கள் இன்சுவைசேர் சித்தி ரான்னம்
செய்துவந்தே படைக்கின்றார் இன்னும் ஓர்பால்
தாதுநிறை நறும்புனலில் தாவி—வீழ்ந்து
தமைமறந்தே ஆடுகிறார் மற்றோர் பாலே.

---

வானதி பதிப்பகம் நகரத்தார் வெளியீட்டு விழாவில் உரையாற்றிய திருமதி உமையாள் ராமனுதன் அவர்களுக்கு திருமதி மணிமேகலை தமிழ்வாணன் அவர்கள் மாலை அணிவித்துச் சிறப்பிக்கிறார்கள்.



## மு. வ. வருக!

எளிய தமிழுக்கும் இனிமைக் குணத்திற்கும் பெரும் எடுத்துக் காட்டாக விளங்குபவர்கள் டாக்டர் மு. வ. அவர்கள்.

எளிமையும் நேர்மையும் தன்னடக்கமும் அமைதியான ஆனால் உறுதியான செயலாக்கமும் கொண்ட அந்தப் பெருமகனார் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகி இருப்பதறிந்து மகிழ்கின்றோம்.

நகரத்தார் சீமையில் உள்ள கல்லூரிகள் அனைத்தும் மதுரைப் பல்கலைக் கழகத்தில் இணைந்தவையாகவே விளங்குகின்றன.

புதிய துணை வேந்தனின் நற்றுணையால் அந்தக் கல்லூரிகளும் அப்பல்கலைக் கழகத்து ஏனைய கல்லூரிகளும் புதுமையும் பொலிவும் பெறும் என நம்புகின்றோம். துணைவேந்தரான டாக்டர் மு. வ. அவர்களை வருக என மனமலர வரவேற்கிறோம்.




## 10. நால்வர் மாநாடு

காலங் கடந்த காலமாக தனக்கு மிஞ்சிய ஆற்றல் ஒன்று இருக்கிறது என்பதை மனித குலம் உணர்ந்தே வந்திருக்கிறது. அந்தப் பேராற்றலைத்தான் பெரியவர்கள் தெய்வம் என்று உணர்ந்தார்கள். பகுத்தறிகின்ற ஆற்றல் மனிதகுலத்துக்கு இருந்தாலும் பகுத்து அறிய முடியாத சில நுட்பங்கள் இருந்து கொண்டு தானே இருக்கின்றன. நமக்கு மேல் ஒரு தலைவன் இருக்கிறான் என நம்பி அவன் நம் மனத்திலே நிறைந்து மனச் சாட்சியாக ஆட்சி செய்கிறான் என்பதனை உணர்ந்து வாழ்வதிலே தவறில்லை அல்லவா?

குழம்பிய மனத்தோடு ஊரை நெருங்கிக் கொண்டிருந்த ஐயாவுக்கு கோயிலில் ஒலித்துக் கொண்டிருந்த மணிநாதம் நெடுஞ்தொலைவிலேயே புல்லரிப்பைத் தந்தது.

“சாயரச்சை நடக்குது போல இருக்கு” என்று கண்ணாயிரத்தை நோக்கி ஐயா கூறினார்கள்.

“ஆமா ஐயா!” என்று கண்ணாயிரம் கூறினான்.

“ஊருக்குள்ளே போனதும் முதல்லே காரைக் கோயிலுக்கு விடு. சாமியைக் கும்புட்டுட்டுப் போவம்”.

கண்ணாயிரம் தலையைப் பெரிதாக ஆட்டி ஆமோதித்தான்.

ஐயா கோயிலுக்கு வந்து சேருவதற்கு முன் அங்கே சில முக்கியமானவர்களைச் சந்திக்கலாம் என்பதால் உங்களையெல்லாம் அங்கே அழைத்துச் செல்கிறேன்.

மாலைக்காலப் பூசை முடிந்தது. நெற்றியெல்லாம் திருநீறு நிறைந்திருக்க அர்ச்சனை செய்த தட்டோடு ராமாயி ஆச்சி (உங்களுக்குத்தான் அவர்களை முன்னரே தெரியுமே இராமநாதன் செட்டியார் சித்தப்பார் மனைவி) வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து இன்னும் மூன்று ஆச்சிகள் வந்தார்கள். எல்லாரும் கோயில் முன் மண்டபத்தில் வந்து அமர்ந்தார்கள்.

ராமாயி ஆச்சியோடு உட்கார்ந்த மூவரில் அன்ன பூரணி ஆச்சி, மரகத ஆச்சி இருவரும் கணவனை இழந்தவர்கள். காந்திமதி ஆச்சி சுமங்கலி.

எதைப் பற்றிப் பேசலாம் என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருந்தபோது இருபது வயது மதிக்கத்தக்க ஒரு பெண் அர்ச்சனை செய்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். ஆனால் அந்தப் பெண் அவர்களைப் பார்த்தும் பார்க்காதவள் போல, முற்றத்திலிருந்து வெளியே செல்லத் தொடங்கினாள்.

"சோலச்சி! என்னடி பாத்தும் பார்க்காதவ மாதிரி போறே!" என்று ராமாயி ஆச்சி கேட்டார்கள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே ஆயா!" என்று சோலச்சி சொன்னாள்.

"அங்கனேயே நிண்ணுகிட்டு தாக்க சொல்றியே என்ன? எங்க பக்கத்திலே வந்தா ஒண்ணும் ஒட்டிகிணறமாட்டாது, வா!"

அதுக்கில்லே ஆயா! அவுக பாங்கிலே இருந்து வந்துருவாக-போயி பலகாரம் பண்ணணும்......

உம் புருஷன் பாங்கிலே வேலே பாக்கிருன்னு எங்களுக்குத் தெரியுமுடி ஆத்தா...பெரிசாப் பொறட்டிக்கிறே...உங்கிட்டே ஒருதாக்க கேக்கணும்...என்று ராமாயி ஆச்சி சொன்னதும் வேறுவழியற்ற சோலச்சி என்ன ஆயா என்று கேட்டுக்கொண்டே அவர்கள் அருகில் வந்தாள்.

அவளை உட்காரும்படி சைகை செய்த ராமாயி ஆச்சி அவள் உட்கார்ந்ததும் "சிங்கப்பூர்லே உம் மாமனுருக்கும் சின்ன மாமனுருக்கும் பெரிய சண்டயாமுல்ல" என்று ரகசியமான குரலில் கேட்டார்கள்.

சோலச்சி அதற்கு என்ன பதில் சொல்லப் போகிறாள் என்று நால்வரும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒருகணம் யோசித்த சோலச்சி நடக்கவில்லை என்றாலும் விடமாட்டார்கள் நடந்தது என்றாலும் விடமாட்டார்கள் என எண்ணம் தோன்றியதால் "ஊர்லே நடக்கிறதுகளே எனக்கு ஒண்ணும் தெரியாது தொலையிலே நடக்கிறதைப் பத்தி நான் என்னத்தை ஆயா கண்டேன்" என்று சாதுர்யமாகப் பதில் சொன்னாள்.

ஆயாளுக்கு முகத்தில் ஈயாடவில்லை.

"இவ கழுத்தை அறுத்தாக்கூட உள்ளது சொல்ல மாட்டாளே!" என்று மரகதாச்சி எரிச்சலோடு கூறினார்கள்.

இவ சொன்ன என்ன சொல்லாட்டியென்ன? இவ மாமனுரும் சின்ன மாமனுரும் அடிச்சுக்கிட்டதைப் பாத்துச் சிங்கப்பூரே சிரிக்கிதாம்-அது தெரிஞ்சு இவ மாமியா கொப்பலப்பியும் மாம னுவண்டி மயிலியும் அடிச்சுகிட்டது ஊரெல்லாம் நாறுது என்று காந்திமதி

ஆச்சி தம்காதில் விளங்கிய வயிரத்தோடுகள் கோயிலில் விளங்கிய விளக்குகளின் ஒளியில் மின்ன கழுத்தை ஒரு வெட்டு வெட்டியபடி எல்லாம் தெரிந்தவர்கள் என்ற பெருமையான எண்ணத்தோடு கூறினுர்கள்.

"ஊர்த் தாக்கலேயே பேசிகிட்டிருக்கவங்களுக் குத்தான் எங்கே சிரிக்குது எங்கே நாறுதுன்னு தெரியும் எனக்கு என்னுயா தெரியுது"

மாமியாளைச் சொன்னவுடனே மருமகளுக்கு சுருக் குங்குதே—என்று காந்திமதியாச்சிகூற மாமியா மருமக ஒத்துமையா இருக்கவுக அதனுலேதான் சுருக்குங்குது! என்று மரகதாச்சி எகத்தாளமாகக் கூறினுர்கள்.

இதற்குமேல் இங்கே இருந்தால் ஏதாவது வம்பிழுப்பார்கள் என எண்ணிய சோலச்சி புறப்பட நினைத்தபோது, ராமாயி ஆச்சியின் சின்ன மருமகள் கமலம் அர்ச்சனைத் தட்டோடு அங்கே வந்து சேர்ந் தாள். மாமியாரையும் மற்றுமிருந்த பெரியவர்களையும் பார்த்ததும் அவளேயறியாமலே ஒரு கலவரம் ஏற்பட் டாலும் தன்னுேடு பள்ளியில் படித்தவளும் தன் சிநேகியுமான சோலச்சியைப் பார்த்துவிட்டுப் பேசாமல் போவது என்னவோ போல இருந்ததால் 'சோலச்சி!' என்று ஒரு வார்த்தை கூறிவிட்டு வேகமாகக் கோயி லுக்குள் போய் விட்டாள்.

மருமகளைப் பார்த்ததும் ராமாயி ஆச்சியின் முகம் கருத்தது.

"பார்த்திகளாடி கொம்பேறி மூக்கன் மாதிரி அவ போறதை!" என்று ஆத்திரம் பொங்க கூறினுர்கள்.

"வேகமாப் போனுக் கொம்பேறி மூக்கன்னுச் சொல்லுவீங்க—தலை நிமிர்ந்துபோனு பாருடி அடக்க ஒடுக்கமில்லாமே அவ போறதை இவ பொம்புளை தானுண்ணு சொல்லுவீங்க குனிஞ்சு போனு பத்தியா தங்கம் போலவுல்ல நடக்கிருன்னு சொல்லுவீங்க" எப்படித்தான் ஆயா போறது. நீங்கள்லாம் சின்ன வயசிலே எப்படித்தான் போனிங்க" என்று சோலச்சி கேட்டாள்.

அதைப் பொருட்படுத்தாத ராமாயி ஆச்சி "இவ வீட்டுச் சங்காத்தத்தைத்தான் நான் ஒழிச்சுத் தொலேச் சுட்டனே! அப்புறம் ஏன் இவ என்னுேடே பேசவாரு? முந்தா நாளு எட்டு இட்டலிய ஒரு சட்டியிலே வைச்சு இந்தாங்க சாப்பிடுங்கண்ணு கொண்டாந்து எம்புட்டு ரெண்டாங்கட்டுலே வைச்சுட்டுப் போரு.

எட்டு இட்டலியா! நல்லாத்தானே வைச்சுருக்கா —என்று மரகதாச்சி கேக்க தொட்டுக்க ஒண்ணும் வைக்கலியா? என்று அன்னபூரணி ஆச்சி கேட் டார்கள்.

அந்த எழவும் கொன்சம் சாம்பாரு கொண்டாந்து தான் போட்டா? அதெல்லாம் நல்லமனசோடையா செய்யுரு? எட்டு இட்டலி திங்க நான் என்ன வண்டிக்

காரன் வாசிக்காரனு? எம் மாமியாளுக்கு எட்டு இட்டலி கொடுத்தேன்னு ஊர்லே ஏத்தத்தான்!''

ஏ ஆயா இப்படிப் பேசுறீங்க-போனவாரம் நாலு இட்டலி கொண்டாந்து வைச்சா. ஒசமத்திக் கழுதை நாய்க்குப் போடுருப்பிலே நாலு இட்டலியைப் போட்டு டுப்போனுன்னு எங்கிட்டயே சொன்னீங்க – இப்ப என்னடான்னு வண்டிக்காரன் வாகிக்காரனுனுன்னு கேக்கிறிய, கமலம் வாயைக்கூடத் திறக்கமாட்டா? அவ ஏத்துவா! ஏத்துவான்னு நீங்கதான் ஊர்லே ஏத்திக்கிறிங்க. பாவம் அவளைத் தூத்திறிங்க'' என்று சற்றுக் கடுமையாகச் கோலச்சி சொன்னுள்.

இவ சொல்லறது நெசந்தான் ராமாயி ஆச்சி! உம்மருமக எம்புட்டோ தேவலே–எம்மருமக எடுத்ததுக் கெல்லாம் சட்டமுல பேசுரு—அவ நிமிசத்திலே குழிக் குளே போயித்து வெளியே வந்துருவா? என்று காந்திமதி ஆச்சி கூறினுர்கள். இப்பொழுதும் அவர்கள் பெருமையாகத் தலையை அசைத்ததால் வயிரக் காதோலே மின்னத் தவறவில்லே.

ஊமை ஊரைக்கெடுக்கும் பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும் - ஊமை மாதிரி இருந்துட்டா நல்லவளா? அம்புட்டும் வெணே—யாரு என்னத்தைச் சொன்னுலும் சரி. என்னேப் படுத்துற பாட்டுக்கு அவ பொட்டல்லே தான் போவா? என்று ராமாயி ஆச்சி தம் கம்பீரமான குரலில் கூறினுர்கள்.

காந்திமதி ஆச்சியும் ராமாயி ஆச்சியும் பொன் மொழிகளே உதிர்க்கத் தொடங்கியபோது ஐயா அவர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

''என்ன ராமாயி யாரைப் பொட்டல்லே போகச் சொல்றே?'' என்று கேட்ட ஐயா மெல்லச் சிரித் தார்கள்.

எதிர்பாராமல் ஐயாவைப் பார்த்ததால் ராமாயி ஆச்சிக்கும் அவர்கள் குழுவைச் சேர்ந்த மற்ற மூவ ருக்கும் என்னவோ போல ஆகிவிட்டது. சோலச்சிக்கு மட்டும் அவர்கள் வந்தது மிகவும் மகிழ்ச்சியைத்தந்தது.

அண்ணே வாங்க! உங்களேத்தான் பாக்கணு முண்ணு இருந்தேன். ராமையா சம்பந்தியா தாக்க சொல்லி விட்டிருக்கா. நீங்களும் இருக்கயிலே சிதை கிட்டேச் சொன்னுத் தேவலேயின்னு நினேச்சே. மகராசன் மகன் நிணேச்சா தெய்வம் மாதிரி வந்திருவிக ...என்று தன் வெங்கலக் குரலில் ராமாயி ஆச்சி கூறினுர்கள்.

சத்தை களிச்சு ராமையா வீட்டுப் பக்கம் வா... பேசிக்குவம்...என்று ஐயா கூறினுர்கள்.

அந்தச் சமயத்தில் சோக்குச் சிங்காரம் அங்கே வந்து சேர்ந்தான்.

ஐயாவைப் பார்த்ததும் அவன் முகம் மலர்ந்தது– அசலூர் நகரத்தார் வந்திருக்கியளாக்கும் வாங்க! வாங்க! என்று அன்புடன் வரவேற்ருன்.

அவனைப் பார்த்ததும் ராமாயி ஆச்சி வெறுப்போடு முகத்தைக் திருப்பிக் கொண்டார்கள்.

“என்ன ஆச்சி மூத்த மகன் வீட்டுப் பேரனைப் பார்த்ததும் முகத்தை இப்புடித் திருப்பிக்கிறே” என்று ஐயா கேட்டார்கள்.

இந்தப் பட்டுக் கெடப்பானைப் பத்தி எங்கட்டேப் பேசாதீங்க அண்ணே! என்று ராமாயி ஆச்சி சீறினார்கள்.

ஐயா! எங்க அப்பாத்தா நல்லாத்திட்டுவாக என்று கூறிச் சிங்காரம் சிரித்தான்.

அடவெங்கங் கெட்ட பயலே உனக்குச் சிரிப்பு வேறேயா! என்னை அப்பத்தாண்ணு சொல்லாதடா பாயி பறப்பேன்னு எத்தனை தரம் சொல்லியிருக்கேன். அப்புறம் ஏண்டா சொல்றே—என்று ராமாயி ஆச்சி கத்தினார்கள்.

“அப்பத்தாவை அப்பத்தாண்ணு சொல்லாமே ஆயாவையா அப்பத்தாண்ணு சொல்லுவாக” என்று சிங்காரம் நீட்டினான்.

“அடகோலங் கொண்ட பயலே. உனக்கு அலக் குடுக்கவா என்னால முடியுது—களவாணிப் பயதானே? உனக்கு மானம் வெக்கம் ஏதுடா?”

ராமாயி ஆச்சி இவ்வளவு கடுமையாகப் பேசும் படியாக சிங்காரம் என்னதான் அப்படிச் செய்திருப் பான் என எண்ணிய ஐயா “ராமாயி! பேரன் என்னத்தைக் களவாண்டா” என்று வேடிக்கையாகக் கேட்டார்கள்.

ஒண்ணுரெண்டா இவம்புட்டு எளவைச் சொல்ற துன்னு ஒரு நாளாகும். நீங்க சாமியைக் கும்புட்டுட்டு வாங்கண்ணே நான் போறேன் என்று ராமாயி ஆச்சி கூறினார்கள்.

ராமாயி! உனக்கு ஒரு வார்த்தை சொல்ல லாண்ணு நினைக்கிறேன். உனக்கு மட்டுமில்லே உங்கூட இருக்கிறவங்களும் நம்ப பிள்ளைகதானே அவங்களுக்குந்தான்.... என்று ஐயா சொன்னதும் “நல்லாச் சொல்லுங்கண்ணே!” என்று ராமாயி ஆச்சி கூறினார்கள்.

“கோட்டை கோட்டையாய்க் கோயில் கட்டினது போய் யாரு செஞ்ச பாவமோ கோட்டை மாதிரி வீடுகளை இடிச்சு விக்கிற நெலமை வந்திருச்சு. இதுக்கு எத்தனையோ காரணங்கள் இருக்குன்னாலும் நம்ம வூட்டு பொம்பளைகளும் ஒரு காரணம்”, என்று ஐயா மெல்லத் தம் கருத்துக்களைக் கூறத் தொடங்கினார்கள்.

“எதுக்கு எடுத்தாலும் பொம்பளைகதான் ஆப்புட் டம்னு நல்லாக் கொறை சொல்றிக. பலகாரம் தின்னு கை காயறதுக்கு முந்தி சீட்டுக் கொட்டகைக்குப் போற செட்டியார்களைப் பத்தியும் கொஞ்சம் சொல்லுங்க ஐயா, அவுகளாலேயெல்லாம் வீடு வாச போகலியா? நகை நட்டு போகலியா? சப்தி வாரண்டு

வர்லியா?'' என்று காந்திமதி ஆச்சி அடுக்கிக் கொண்டே போனார்கள்.

''தப்பு ஆரு செஞ்சாலும் தப்புத்தான் ஆத்தா. ஆம்பளைக செய்யறதெல்லாம் ஞாயம்னு நான் சொல்லலே. அதுக்காக நீங்களும் போட்டி போட்டுக் கிட்டு பண்ணனுமா?'' என்று ஐயா கேட்டார்கள்.

''நாங்க அப்படி என்ன பண்றோம்? நம்ம வீட்டு கள்லே, நாங்க செட்டா சமத்தா இருக்கிறதனாலே அடுப்பு புகையுது'' என்று அன்னபூரணி ஆச்சி கூறியதன் மூலம் தானும் சமர்த்திதான் என்பதை நிலைநாட்டிக் கொண்டார்கள்.

''அது நெசந்தான். வருசமெல்லாம் வத்தக் குழம்பு வச்சு சாப்பிட்டு கலியாணம் புதுமைன்னு நாலு நாளைக்குப் போடற போட்டுல வீடே புகைஞ்சு போயிரும் போல இருக்கே'' என்று கூறிச் சிங்காரம் பெரிதாகச் சிரித்தான்.

''சாப்பாட்டிலே என்னடா போயிரும்? முறை தலையிலேதான் நம்ம தலைமுறை பெருமையே போயி நம்ம சாதி ரொம்பச் சங்கடப்பட்டுப் போயிரும் போல இருக்கு, அந்தக் கதை பெரிய கதை, இப்ப விசயத் துக்கு வருவோம், ராமாயி, கோயிலுக்கு எதுக்கு வாறோம்?'' என்று ஐயா கேட்டார்கள்.

''கும்பிடத்தான் வர்றோம்'' என்று ராமாயி ஆச்சி சொன்னார்கள்.

''கும்புட்டுட்டு நல்ல பேச்சுப் பேசப்படாதா? சாமியைக் கும்பிடறதனாலே எம்புட்டு புண்ணியம் வருதோ அதுக்குமேலே உடனேயே பாவம் பண்ணிடு விக போல இருக்கே. பட்டுக் கிடப்ப, பாவி பெறப்ப, பொட்டல்லே போவா, குழியிலே போவா, இதெல்லாம் கோயில்லே பேசற பேச்சா? மத்த இடங்கள்லேதான் இதைப் பேசலாமா? மத்தவங்களுக்குத்தான் ஞாயமா? நமக்கு இல்லியா? மருமகன்னு பகையா? நம்ம பெத்த பொண்ணும் இன்னொரு வீட்டுக்கு மருமகளாத்தானே போவா? அதை நினைக்க வேண்டாமா? நாளையிலே இருந்தாவது கோயிலுக்கு வந்தா ஊருக் கதை பேசற தையும் திட்டறதையும் விட்டுத் தொலைங்க, வேலை இல்லைன்னு,கோப்பலாப் புட்டி, கோட்டைப் புட்டின்னு எதையாவது மொடஞ்சிக்கிட்டிருக்கலாமே. நல்ல பொழுதா போவும். சில்லறை செலவுக்கு காசும் ஆகும், போங்க போங்க என்னமோ எனக்குத் தெரிஞ்சதைச் சொன்னேன். போற போக்கிலே என்னைத் திட்டிக் கிட்டுப் போகாதிங்க'' என்று ஐயா கூறினார்கள்.

''தருமராசா உங்களை யாரும் திட்டுவாகளா?'' என்று ராமாயி ஆச்சி கூறிவிட்டுப் புறப்படத் தொடங் கினார்கள்.

''ஐபா, உங்களைப் போல நாலு பேரு ஊருக்கு ஊரு போயி இப்படி நல்ல விசயங்களைச் சொன்னா நம்ம சாதி உருப்பட்டுடும் எங்களைப் போல சின்னஞ் சிறுசு

களுக்கு நிம்மதி ஏற்படும்'' என்று புன்னகை பூத்த படியே கூறிய சோலச்சி ராமாயி ஆச்சி குழுவினரை முந்திக் கொண்டு விட்டை நோக்கி நடந்தாள்.

''சின்னப் புள்ளேக கொஞ்சங் கொஞ்சமா மாறி டுங்க போல இருக்கு'' என்று கூறிக்கொண்டே ஐயா அவர்கள் கோயிலுக்குள் சென்றுர்கள். சிங்காரம் அவர்களேப் பின் தொடர்ந்தான்.

## 11. ஐயாவும் சிங்காரமும்

ஐயாவும் சிங்காரமும் கோயிலுக்குள் நுழைந்த போது கமலம் எதிர்ப்பட்டாள். ஐயா அவர்கள் அடிக் கடி வந்து போவது அவளுக்குத் தெரியுமாதலால் 'வாங்க' என்று கேட்டுக் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுப் போனுள்.

''ஏண்டா சிங்காரம், போறது உன் சித்தப்பாரு சம்சாரம் தானே? படிச்ச பொண்ணு இருக்கும் போல இருக்கு'' என்று ஐயா கேட்டார்கள்.

''பி. எஸ்சி. படிச்சிருக்கு ஐயா,'' என்று சிங்காரம் கூறினுன்.

சுற்றுப் பிரகாரம் வந்த ஐயா உயிர்பெற்று வந்த வர்கள்போல் இருந்த வளரொளி நாதரையும் வடிவுடை அம்பிகையையும் வணங்கினுர்கள். விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்ட அவர்களே அத்தியான பட்டரும் குருக்களும் மிகவும் விசாரித்தார்கள். ஐயாவும் சிங்கா ரமும் பிரகாரத்தை ஒட்டிய முற்றத்தில் அமர்ந்தார்கள்.

கோயில் கர்ப்பக்கிருகத்தில் அலேஅலேயாக எழும் பிக் கொண்டிருந்த ஊதுவத்தியின் மணமும் பழனி விபூதி சந்தனம் இவற்றின் மணமும் சேர்ந்து வெளியி லிருந்து வந்த காற்ருேடு கலந்துகொண்டிருந்தன. சற்றுத் தொலேவில் குருக்கள் வீட்டுப் பிள்ளேகளும் அத்தியான பட்டர் வீட்டுப் பிள்ளேகளும் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தார்கள். சிங்காரத்தைப் பார்த் ததும் அவர்களுக்குக் கொள்ளே மகிழ்ச்சி. அவர்கள் எல்லாரும் ஓடிவந்து சிங்காரத்தைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள்.

''அண்ணு, ஒரு பாட்டுப் பாடுங்கோ'' என்று குருக்களின் மூத்த பையன் மணி சிங்காரத்தைப் பார்த்துக் கேட்டான்.

''சிங்காரம், நீ நல்லா பாடுவியா?'' என்று ஐயா கேட்டார்கள்.

''ரொம்ப நன்ருய் பாடுவா'' என்று மணியின் தங்கை அபிராமி தன் குழலே மொழியால் கூறினுள்.

பிள்ளேகள் எல்லாரும் பாடும்படி சிங்காரத்திடம் வேண்டினுர்கள்.

''ஏண்டா சிங்காரம், ஒரு பாட்டுத்தான் பாடேன்'' என்று குருக்கள் குரல் கொடுத்தார்.

"மணியான பிள்ளை கால வித்தியாசம், எப்படியோ ஆயிட்டான்" என்று அத்தியானபட்டர் மெல்லிய குரலில் கூறித் தமக்குத்தாமே நொந்து கொண்டார்.

சிங்காரம், கரம் குவித்தபடியே பாடினான்:

"நமச்சி வாய வாழ்க
நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில்
நீங்காதான் தாள் வாழ்க.
கரங்குவிவார் உள்மகிழும்
கோன்கழல்கள் வெல்க.
சிரங்குவிவார் ஓங்குவிக்கும்
சீரோன் கழல்வெல்க.
ஈசன் அடிபோற்றி
எந்தை அடியோற்றி
தேசன் அடிபோற்றி
சிவன் சேவடி போற்றி
நேயத்தே நின்ற
நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பு அறுக்கும்
மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம்
தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம்
அருளும்மலை போற்றி."

நெஞ்சை நெக்குருகச் செய்கின்ற மாணிக்கவாசக சுவாமிகளின் பாடலைச் சிங்காரம் பாடியபொழுது ஐயாவும் அங்கிருந்த அனைவரும் மெய்யுருகிப் போனார்கள்.

"சிங்காரம் நீ இப்படிப் பாடுவேன்னு எனக்குத் தெரியவே தெரியாதே" என்று ஐயா கூறினார்கள்.

சிக்காரத்தோட சாரீர வாகுக்கு எங்களவாளோட பையனா இருந்தா நூறு கச்சேரி பண்ணியிருப்பானுக்கும், பெரிய வித்வானா வந்திருப்பான். விதின்னு ஒண்ணு இருக்கோ இல்லியோ, அது பால்யத்திலேயே இவனோட வாழ்க்கையிலே வந்து விளையாடிட்டது," என்று ஆற்றாமையோடு குருக்கள் சொன்னார். அங்கு சற்று நேரம் அமைதி நிலவியது. பிள்ளைகளை வீட்டுக்கும் போகுமாறு அத்தியானபட்டர் கூறினார். அவர்கள் புத்தகங்களை எடுத்துக்கொண்டு அக்ரகாரத்துக்குச் சென்றார்கள்.

"ஏ அப்பச்சி சிங்காரம் இவ்வளவு சமத்தா நீ இருந்தும் பலபேரும் பலமாதிரியா சொல்றுங்களே ஏம்ப்பா?" என்று மெல்லிய குரலில் ஐயா அவர்கள் மிகுந்த அனுதாபத்தோடு கேட்டார்கள்.

நீண்ட காலமாக மனம் விட்டுப் பேச ஆள் கிடைக்காமல் இருந்த சிங்காரம் தன் உள்ளக் கடலில் அலை மோதிக் கொண்டிருந்த எண்ண அலைகளையெல்லாம் ஐயாமுன் கொட்டத் தொடங்கினான்.

—தொடரும்

# நகரத்தார் வளர்ச்சிக்கு நல்லதொரு பயணம்

— புலவர் நாகசண்முகம்

**தங்கமான குணம்!**

சேலம்-திருச்சி நெடுஞ்சாலையில் கார் செல்லத் தொடங்கிய போது ஐயா அவர்கள் தம் கலகலப்பான பேச்சையும் தொடங்கினார்கள். அவர்களுடைய பங்குதாரரான இராயவரம் எஸ். எம். ஆர்எம். அடைக்கலவன் செட்டியார் அவர்களைப் பார்ப்பதற்காகவே நாங்கள் இராசிபுரத்துக்குச் சென்று கொண்டிருந்தோம். அவர்களுடைய தமிழ்ப் பற்றைப் பற்றியும் சிறந்த குணம் பக்தி-இவை பற்றியும் ஐயா அவர்கள் சொன்னார்கள்.

இராசிபுரத்தில் நகர்ப்புறப் பகுதியான வ. உ. சி. நகரில் அடைக் கலவன் செட்டியார் அவர்களுடைய இல்லம் இருக்கிறது. அவர்கள் மிகவும் அன்போடு எங்களை வரவேற்றார்கள். செல்வ வளம் நிறைந்த குடும்பத்தில் பிறந்த அவர்கள் மேற்கொண்டுள்ள சீரிய பண்பாடும் தங்கமான குணமும் எங்களுக்குப் பெரு வியப்பைத் தந்தன. அவர்கள் வீட்டு மாடியில் உள்ள பூசையறையின் பொலிவும் அழகும் பார்ப்பவர் களின் உள்ளங்களை யெல்லாம் புனிதமாக்கும் வன்மை பெற்று விளங்கு கின்றன. மாடி முற்றத்திலிருந்து பார்த்தால் தொலை தூரத்தில் விளங்குகின்ற மலைகளும் அணிவகுத்து நிற்கும் போர் மறவர்களைப் போல விளங்கும் தென்னை மரங்களின் வரிசைகளும் கேரளப் பகுதியை நமக்கு நினைவூட்டுவனவாக அமைந்துள்ளன. விரைவிலேயே அவர் கள் வீட்டுக்கு முன்னுள்ள இடத்தில், ஊர்ப் பிரமுகர்களின் நல்ல ஒத்துழைப்புடன் இருபதினாயிரம் ரூபாய் செலவில் விநாயகர் கோயில் ஒன்று கட்டப் போவதாக அடைக்கலவன் செட்டியார் அவர்கள் சொன்னார்கள்.

நம் பத்திரிகையின் நல்ல தொண்டைப் பாராட்டிய அவர்கள், மன நலம் இல்லையென்றால் ஒரு வளமும் ஏற்படாது; கடவுளைப் பற்றிய சிறந்த கருத்துக்களை நீங்கள் அவ்வப்பொழுது நம் இதழில் வெளியிட வேண்டும் என்று கூறிச் சுவாமி இராமதாசர் எழுதிய 'உலகமே கடவுள்' (World is god) என்ற நூலையும் 'புனித வாழ்க்கை' (The Divine Life) என்ற நூலையும் தந்து அதன் பகுதிகளை மொழிபெயர்த்து வெளியிடு மாறு அன்புடன் கூறினார்கள். அவர்களிடம் நீண்ட நேரம் உரையாட வேண்டுமென்ற பெருவிருப்பம் எங்களுக்கு இருந்தாலும் வந்த

கடமையை எண்ணி அவர்களிடம் அன்புவிடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டோம்.

### புகழ் பெற்ற குடும்பம்

இராசிபுரத்திலிருந்து நாங்கள் திருச்செங்கோட்டிற்குச் சென்றோம். இறைவன் அப்பனுகவும் அம்மையாகவும் விளங்குகின்ற ஓர் இடம், பெயர் பெற்ற நல்லிடம். அந்த ஊருக்கு நாம் வந்திருக்கிறோம் என்று எண்ணிய போதே உள்ளத்தில் சிலிர்ப்பு ஏற்பட்டது. தேவகோட்டையில் சத்திரத்தார் வீடு எனப் புகழ் பெற்ற குடும்பத்தைச் சேர்ந்த அரு. அரு. சோம. சு. சுந்தரேசன் செட்டியார் அவர்களைச் சந்தித்தோம். அவர்கள் குடும்பத்தார் செய்த அறப் பணிகளைப் பற்றிக் கேட்டோம். நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே அவர்களுடைய குடும்பத்தார் பத்து லட்சம் ரூபாய் செலவில் காளாஸ்திரி கோயிலுக்குத் திருப்பணி செய்தது பற்றியும் அவர்களுடைய தந்தையார் தஞ்சை மாவட்டத்தில் செய்த திருப்பணிகள் பற்றியும் விரிவாகச் சொன்னுர்கள். (அக்குடும்பத்தாரின் அறப்பணிகள் விரைவில் விரிவான முறையில் நம் இதழில் வெளிவர இருக்கின்றன என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்). சுந்தரேசன் செட்டியார் அவர்கள், நீண்ட காலமாகத் திருச்செங்கோட்டில் தொழில் செய்து வருகின்றுர்கள். அவர்களுடைய குமாரர் அருணுசலம் செட்டியார் அவர்களும் அந்த ஊரில் விரிவான முறையில் தொழிலே மேற்கொண்டுள்ளார்கள். அவர்களிடமெல்லாம் உறுப்பினர் கட்டணம் பெற்றுக் கொண்டு சங்ககிரியை நோக்கிப் புறப்டோம்.

### பழைய கடையும் புதுக் கடையும்

சங்ககிரியில் நம்மவர்களின் சுப. மு. பேர்ம் என்ற கடைக்குச் சென்றோம். அங்கு இருக்கும் பூலாங்குறிச்சி செட்டியார் அவர்கள் எங்களுக்கு முன்னரே தெரிந்தவர்கள். அவர்களிடம், "இங்கு இன்னும் எத்தனை கடைகள் இருக்கின்றன?'' என்று கேட்டோம். இன்னும் ஒரு கடை இருக்கிறது, அது புதுக்கடை என்று அவர்கள் கூறினுர்கள். "அந்தக் கடை எப்போது ஆரம்பிக்கப்பட்டது?'' என்று பழனியப்பா அவர்கள் கேட்டார்கள். அதைக் கேட்டதும் செட்டியார் அவர்கள் சிரித்தார்கள். பிறகு அந்தக் கடை ஆரம்பித்து "ஐம்பது வருடங்கள் ஆகின்றன'' என்று கூறினர்கள். அவர்கள் ஏதோ வேடிக்கையாகக் கூறுகின்றுர்கள் என்றே நாங்கள் நினைத்தோம். பிறகு அவர்கள் நிலைமையை விளக்கிச் சொன்னுர்கள். "எங்கள் கடை ஆரம்பித்து நூறு வருடங்கள் ஆகின்றன. ஐம்பது வருடங்களுக்கு முன்னுல் அந்தக் கடை, (தேவகோட்டை. அரு. மு. முத்தையா செட்டியார் அவர்களுடைய கடை) ஆரம்பிக்கிற போது அதைப் புதுக் கடை என்றும் இதைப் பழைய கடை என்றும் சொல்லியிருக்கிருர்கள். அதுவே நிலைத்துவிட்டது. இப்பொழுது தபால் முகவரி கூட, பழைய பேங்க், புது பேங்க் என்றுதான் போட்டு வருகிறோம்,'' என்று கூறினுர்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தொடங்கப் பெற்ற கடை புதுக் கடை என்ற பெயரோடு விளங்குவதை எண்ணி நாங்கள் வியப்படைந்

தோம். ஊரையொட்டிய மலையில் விளங்குகின்ற கோட்டையின் அழகிய காட்சியைப் பார்த்தபடியே அங்கிருந்து புறப்பட்டோம்.

குமாரபாளையம் பவானியில் நாங்கள்

குமாரபாளையத்தில் உள்ள நம்மவர்கள் நிறுவனங்களில் உறுப்பினர் கட்டணங்களைப் பெற்றுக் கொண்ட நாங்கள் பவானியை நோக்கிப் புறப்பட்டோம். குமாரபாளையத்தையும் பவானியையும் வேறு வேறு ஊர் எனப் பிரித்துக் காட்டுவது இரண்டு ஊர்களுக்கும் இடையில் விளங்குகின்ற காவிரி ஆறுதான்! அந்த ஆற்றுப் பாலத்தின் மீது நாங்கள் சென்ற போது வலப் புறத்தில் ஊராட்சிக் கோட்டை என்று கூறப்படுகின்ற மலையும் இடதுபுறத்தில் திருச்செங்கோடுமலையும் சில கல்தொலைவில் ஆனால் நேருக்கு நேர் விளங்குகின்ற காட்சி கண் கொள்ளாக் காட்சியாக விளங்கியது.

உயர் நிலைப் பள்ளியில் என் வகுப்புத் தோழராக விளங்கிய வேந்தன்பட்டி சாமிநாதன் அவர்கள் பவானியில தக்க துணையாக இருந்து உதவினார்கள்.

இரவு ஈரோட்டில்!

இரவு ஈரோட்டில் இந்தியன் வங்கியில் ஏஜெண்ட்டாகப் பணியாற்றுகின்ற செந்தில்நாதன் செட்டியார் அவர்களுக்கு (தேவகோட்டை) சேலம் அருணாசல அண்ணன் அவர்கள் கடிதம் தந்திருந்தார்கள். அதோடு, ஐயா அவர்களுக்குச் செந்தில்நாதன் செட்டியார் அவர்களை முன்னரே தெரியும் அந்நகரில் ஜவுளித் தொழில் புரிந்து வரும் கண்டவராயன்பட்டி என், எஸ். எஸ். சொக்கலிங்கம்செட்டியார் அவர்கள் மைந்தர் சிவா அவர்கள் பழகிபப்பா அவர்களுக்குச் சகலை- ஈரோடுநகரத்தார் சங்கச் செயலாளர் திரு முத்துக் கருப்பன் (வலையபட்டி) அவர்கள் நெடுநாட்களாகப் என் கெழுதகை நண்பர். இவர்களுடைய உதவியால் ஈரோட்டில் முயற்சிகள் வெற்றியாக அமையும் என எண்ணிய படியே இரவு ஒன்பது மணி அளவில் ஈரோட்டை அடைந்தோம்.

அன்பு மிக்க வரவேற்பு

மறு நாள் ஆண்டுக் கடைசி நாள் ஆதலால் வங்கிக் கணக்குகளை முடிக்கும் பணியில் எல்லோரும் ஈடுபட்டிருந்தார்கள். அதனால் ஏஜெண்ட் செந்தில் நாதன் செட்டியார் அவர்களையும் வங்கியில் பணிபுரியும் மற்றவர்களையும் அப்பொழுதே பார்க்கின்ற வாய்ப்புக் கிடைத்தது.

செந்தில் நாதன் செட்டியார் அவர்கள் மிகுந்த அன்போடு வரவேற்றார்கள். நாங்கள் வந்துள்ள பணிபற்றி ஐயா சொன்னார்கள் ‘‘சென்ற ஆண்டே இந்தப் பணியை மேற் கொண்டிருக்க வேண்டும். இப்பொழுதாவது வந்தார்களே அதுவரை மகிழ்ச்சி! பொதுக் காரியங்களைப் பலருடைய ஆதரவு இல்லாமல் நடத்த முடியாது. நடத்தினாலும் அது எல்லோருக்கும் பயன் படாது’’ என்று கூறி காஷியராக அங்கு பணிபுரியும் வயிரவன் அவர்களை அழைத்து மறுநாள் இந்த நல்ல முயற்சி தொடர்பாக யார் யாரைப் பார்க்கலாம் என்று கலந்து பேசி ஒரு பட்டியல் தயாரித்துக் கொண்டார்கள். அதோடு வங்கியில்

பணிபுரியும் நம்மவர்களை அப்பொழுதே உறுப்பினர்கள் ஆக்கி உதவினார்கள். ஈரோட்டை அடைந்ததுமே திரு சிவா அவர்களுக்கு நாங்கள் வந்துள்ள செய்தி பற்றிப் பழநியப்பா அவர்கள் தொலைபேசி மூலம் தெரிவித்திருந்தார்கள். நாங்கள் பத்தேமுக்கால் மணி அளவில் சிவா அவர்கள் இல்லத்தை அடைந்தபோது எங்களை வரவேற்க மாடி முற்றத்தில் குடும்பத்துடன் அவர்கள் நின்றிருந்த காட்சி மறக்க முடியாததாகும்.

நகரத்தார் கூட்டம்

காலையில் நாங்கள் வந்த முயற்சியில் முதற்படியாக செந்தில் நாதன் செட்டியார் அவர்களைச் சந்தித்தோம். வயிரவன் அவர்கள் எங்கள் வரவிற்காக வங்கியில் காத்திருந்தார்கள். யார் யார் புறப்படுவது என்று எண்ணமிட்டபோது ஒரு கார் போதாது என்ற முடிவிற்கு ஏஜண்ட் அவர்கள் வந்தார்கள். ஏ. எல். எஸ். அன்கோ (கண்டவராயன்பட்டி ஏ. எல். சிங்காரம் செட்டியார் அவர்களுடையது) என்ற நிறுவனத்திற்கு தொலைபேசி மூலம் தொடர்புகொண்டு அவர்களுடைய குமாரர் தியாகராசன் பி. காம் அவர்களிடம் ஒரு காரைப் பெற்றார்கள். நாங்கள் நால்வர் செந்தில்நாதன் செட்டியார் அவர்கள்-சிவா அவர்கள்-வயிரவன் அவர்கள், சங்கத்துணைத்தலைவர் கே. ஆர். சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்-சங்கச் செயலாளர் முத்துக்கருப்பன் அவர்கள் ஆகியோர் புறப்பட்டோம். அக்காட்சி கொங்குநாட்டு நகர் ஒன்றில் நன்முயற்சி ஒன்றிற்காக நகரத்தார் கூட்டம் ஒன்று புறப்பட்டது போல இருந்தது.

நிறைந்த அளவில் ஆயுள் உறுப்பினர்களும் ஆண்டுக்கட்டண உறுப்பினர்களும் விளம்பரங்களும் சேர்த்துத் தந்து உதவினார்கள்.

பகல் உணவிற்குப் பின்னர் நண்பர் வயிரவன் அவர்கள் சிவா அவர்கள் இல்லத்திற்கு வந்தார்கள்.

கூட்டுவழிபாடு

ஈரோடு நகரத்தார் சங்கம் செய்கின்ற அரிய பணிகள் பற்றி இருவரும் கூறினார்கள். அதோடு, வாரம் தோறும் ஞாயிற்றுக்கிழமை காலை, தொடர்ந்து கூட்டுவழிபாடு நன்கு நடைபெற்று வருவதாகவும் அதில் பலர் கலந்துகொண்டு பயன்பெறுவதாகவும் தெரிவித்தார்கள். அருகில் உள்ள தண்டல்மலை முருகன் கோயிலுக்கு நம் மரபினரில் பலர் மாதம் தோறும் கார்த்திகையன்று போய் வருவதாகவும் பல சமயங்களில் அந்தப் பயணத்தில் செந்தில்நாதன் செட்டியார் அவர்களும் கலந்து கொள்வார்கள் என்றும் கூறினார்கள்.

வங்கி மற்றும் தொழில் நிறுவனங்களில் பணிபுரிபவர்கள் ஞாயிற்றுக் கிழமைகளைப் பயனற்ற வழிகளில் பயன்படுத்தி வருகின்ற நிலை பல இடங்களில் இருக்கின்ற போது பயனுள்ள பணிகளில், ஒப்புக்காக இல்லாமல் உள்ளத் தூய்மையோடு,ஆர்வத்தோடு ஈரோட்டு நகரத்தார் இளைஞர்கள் ஈடுபட்டு வருவதும் அதற்கு அந்நகரத்துவாழும் நம் குலப் பெருமக்கள் ஆதரவு தந்து வருவதும் எங்களுக்குப் பெருமிதத்தைத் தந்தன.

### கோபிச் செட்டிப்பாளையம்

அன்று மாலை வேறு பணிகள் இருந்ததால் ஐபா அவர்கள் எங்களிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள். அவர்கள் பயணத்தில் தொடர்ந்து வர இயலாதது எங்களுக்குப் பெருங் குறையாகவே இருந்தது.

பிறகு கோபிச்செட்டிப் பாளையத்திற்குச் சென்றோம். அவ்வூர்ப் பெருமக்கள் ஆதரவினைப் பெற்ற நாங்கள் இரவு ஈரோட்டை அடைந்து சிவா அவர்கள் இல்லத்தில் தங்கினோம்.

### ஆண்டுப் பிறப்பு

1971—ஆம் ஆண்டில் முதல் நாளில் நாங்கள் ஈரோட்டில் தங்கும் நிலை நேர்ந்தது.

அதற்காகச் சிவா அவர்களும் வைரவன் அவர்களும் மிகவும் மகிழ்ந்தார்கள். ஆனால், பிறகு அன்று தங்கியதற்காக நாங்கள் மிகவும் மகிழ்ந்தோம்.

ஈரோட்டில் சிறப்புற்று விளங்கும் ஈசுவரன் கோயிலில் ஆண்டு தோறும் ஆண்டுப் பிறப்பன்று கொடி ஏற்றும் சிறப்பு நிகழ்ச்சி ஒன்று நடைபெறுகின்றது. அரசியல் கொடிகளையும் ஆட்சிக் கொடிகளையும் ஏற்றுவதைப் பல வேளைகளில் பார்க்கின்ற வாய்ப்பினைப் பெற்றவர்கள் நாங்கள் என்றாலும் அன்புக் கொடி அறக் கொடி பண்புக் கொடியான ஆண்டவனின் அற்புதக் கொடியை ஏற்றும் விழாவினைக் காணுகின்ற பேறு அன்று எங்களுக்குக் கிட்டியது.

### தமிழில் வழிபாடு

இறைவனது வாய் வேதம் ஒலிக்கின்ற திருவாய். அந்தவாய் சுந்தரரைப் பார்த்து தமிழில் பாடுக என்று சொன்னது. இதனைச் சேக்கிழார் சுவாமிகள் "சொற்றமிழ் பாடுக என்றான் தூய்மறை பாடும் வாயான்" என்று கூறியுள்ளார். வேதமறிந்த நாதனே தமிழில் பாடுக என்று கேட்டிருக்க, தமிழ் மொழியில் வழிபாடு செய்ய இயலாது, செய்யக் கூடாது என்று கூறுகிறவர்கள் பலர் நம் தாயகத்தில் வாழ்ந்தனர். இன்னும் கூட வாழ்கின்றனர். ஈரோட்டு ஈஸ்வரன் கோயிலில் எல்லா அர்ச்சனைகளும் தமிழில் செய்யப்படுகிறது என்பதைப் பார்த்தபோது எங்கள் உடல் புல்லரித்தது; உள்ளம் பெருமிதத்தால் நிறைந்தது. கடந்த 10 ஆண்டுகளுககும் மேலாக அங்குத் தமிழில்தான் வழிபாடு நடந்து வருகிறது என்று சிவா அவர்கள் கூறியபோது, நாங்கள் பேருவகை அடைந்தோம். மார்கழித் திங்கள் அல்லவா! மதி நிறைந்த அந்த நல்ல நாளில் (திருவாதிரையை ஒட்டியநாள்) திருக்கூத்தாடும் தெய்வமான நடராஜப் பெருமானின் பேரழகு வடிவிற்கு முன்னே ஓதுவார் தேனனைய திருவெம்பாவைப் பாடல்களைப் பாடிவர ஒவ்வொரு பாடலும் நிறைவு பெற்றதும் மணி முழங்க இசை முழங்க அர்ச்சகர் ஆனந்தக் கூத்தாடும் ஐயனுக்குக் கற்பூரம் காட்டி சிறப்பித்தார். ஆண்டுப் பிறப்பு ஆண்டவன் தெரிசனத்தோடு தொடங்கியது குறித்து நாங்கள் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தோம். செந்தில் நாதன் செட்டியார் அவர்கள், சிவா அவர்கள், வைரவன் அவர்கள், செயலாளர் முத்துக் கருப்பன் அவர்கள் ஆகியோர் காட்டிய அன்பும் பரிவும்

என்றும் மறக்க முடியாதனவாகும். அவர்களுக்கும் மற்றும் உதவி புரிந்த பெருமக்கள் அனைவருக்கும் நன்றி கூறிய நாங்கள் ஈரோட்டை விட்டு புறப்பட்டோம்.

### திருப்பூரில் நாங்கள்

திருப்பூருக்கு செல்லுகின்ற வழியில் பெருந்துறைக்குச் சென்றோம். அங்கு நம்மவர்களின் லேவாதேவிக் கடை இரண்டு இருக்கின்றன. அந்தக் கடைகளில் உறுப்பினர் கட்டணம் பெற்றுக் கொண்டு திருப்பூரை அடைந்தோம். இந்தியன் வங்கி ஏஜண்ட் வி ஆர். சிதம்பரம் (பள்ளத்தூர்) அவர்களைச் சந்தித்தோம். அவர்கள் ஆர். அண்ணாமலை செட்டியார் அவர்களோடு (குளிபிறை) தொடர்பு கொண்டு எங்களுக்கு தக்க உதவிகள் செய்யுமாறு கூறினார்கள். அண்ணாமலை செட்டியார் அவர்களும் நண்பர் என். பெத்தபெருமாள் (காரைக்குடி) அவர்களும் தக்க துணையாக வந்து உதவி புரிந்தார்கள். இரவு 8 மணி அளவில் அங்கிருந்து புறப்பட்ட நாங்கள் பல்லடத்தில் உறுப்பினர் கட்டணங்களைப் பெற்றுக் கொண்டு கோவை நோக்கிப் புறப்பட்டோம். அந்த நேரத்திலும் பல்லடத்தில் உள்ள எம். எஸ். பி. வி. ஆர். பேர்மைச் சேர்ந்த எஸ். பி. வயிரவன் அவர்கள் தக்க உதவிகள் புரிந்தார்கள்.

### பனியோ இல்லை மழையோ

நாங்கள் கோவைப் பெருநகரை அடைந்தபோது இரவு மணி பதினொன்றேகால். பனி, மழைபோல் கொட்டிக் கொண்டிருந்தது. முக்கியமானவர்களில் ஒருவரை இரவே பார்த்து விடுவது மறு நாள் பணிக்குப் பயன் உள்ளதாக இருக்கும் என்று நாங்கள் நினைத்தோம். சௌத் இந்தியா கார்ப்பரேஷன் ஏஜன்சீஸ் பிரைவேட் லிமிட்டெட் கோவை கிளையின் பொறுப்பாளராக விளங்குகின்ற எஸ். எம். ரெங்கநாதன் (சிறுவயல்) அவர்களை நாங்கள் சந்திப்பது என்று முடிவு செய்தோம். அந்த முடிவை நாங்கள் மேற்கொண்டதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று சௌத் இந்தியா கார்ப்பரேஷனின் சென்னை அலுவலகத்துப் பொறுப்பாளராகவும், நகரத்தார் ஐக்கிய சங்கத்தின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிபவர்களாகவும் விளங்கிய சோமசுந்தரம் செட்டியார் அவர்களுடைய திருக்குமாரர்தான் ரெங்கநாத அண்ணன் அவர்கள். எனவே தந்தைவழி தனயனும் பொதுப் பணியில் ஆர்வம் உள்ளவர்கள் என்று கேள்விப்பட்டிருந்தது. மற்றொன்று மேற்படி நிறுவனத்தின் சென்னைத் தலைமை நிறுவனத்தின் விரிவாக்க அதிகாரியாக விளங்குகின்ற கே. என். கருப்பையா அண்ணன் அவர்கள் ரெங்கநாத அண்ணனுக்குக் கொடுத்த கடிதம்.

வேலுண்டு வினையில்லை என்பார்கள். அதுபோலக் கடிதம் உண்டு கவலை இல்லை என எண்ணிக் கதவைத் தட்டினோம். கடிதத்தை கண்ட ரெங்கநாத அண்ணன் அவர்கள் அன்புடன் எங்களை வரவேற்று அங்கு பணியாற்றுகின்ற அழகப்பன் என்பவர்களை அழைத்து அந்தப் பங்களா மாடியிலே நாங்கள் தங்குவதற்குத் தக்க ஏற்பாடு செய்யுமாறு கூறினார்கள்.

### செயலாளரின் சிறப்பான உதவி

கோவை நகரத்தார் சங்கச் செயலாளர் என். கே. நாகப்ப செட்டியார் (அலவாக்கோட்டை) அவர்களோடு தொடர்பு கொண்டு முக்கிய

மாகப் பார்க்க வேண்டியவர்களைப் பற்றி குறிப்பு ஒன்றினை ரெங்கனாதண்ணன் அவர்கள் எடுத்துக் கொண்டார்கள். மறுநாள் நாங்கள் சென்னை புறப்பட வேண்டிய நிலை இருந்ததாலும் அன்று பிள்ளையார் நோன்பாக இருந்ததால் பலர் ஊருக்கு போய் இருந்ததாலும் இருவரும் பேருதவி புரிந்து அன்றே பல ஆயுள் சந்தாக்களைப்பெற்றுத் தந்தார்கள்.

### கண்கொள்ளாக் காட்சி

திரைகடல் ஓடிந் திரவியம் தேடிய நம் மரபினர் இப்பொழுது ஊர் கடந்து மாவட்டம் கடந்து வாழ்கிறோம். ஆயினும் நாம் நம்முடைய பழமையான சிறப்பான பழக்க வழக்கங்களைப் போற்றுவதில் எல்லையில்லாத பெருமை இருக்கிறது என்பதனை கோவையில் நாங்கள் கண்டோம். அந்நகரில் வாழ்கின்ற நம்மரபினர் "கோயம்புத்தூர் நாட்டுக் கோட்டை நகரத்தார் தர்மநிதி" என்று ஒரு அமைப்பினை நிறுவி இருக்கிறார்கள். அதற்கு சிவகாமி பைனான்ஸ் எஸ். எஸ். ஏ. ராமஞ்செட்டியார் அவர்களும், மீனாட்சி ஆட்டோ ஸ்டோர்ஸ் எஸ். பி. ராமசாமி அவர்களும் இந்த ஆண்டு காரியக்காரர்களாக இருந்து வருகிறார்கள். அந்த அமைப்பு தொடர்பாக திருப்பேரூர் ஆலயத்தில் பல அறச் செயல்களைப் புரிந்து வருகிறார்கள். நந்தவனம் வைத்து இறைவன் ஆராதனைக்கு மலர் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளார்கள்.

பிள்ளையார் நோன்பிற்கு கோவையில் வாழ்கின்ற எல்லாக் குடும்பங்களுக்கும் இந்த தர்ம நிதி அமைப்பிலிருந்து ஆவரம் பூக் கட்டிக் கொடுக்கிறார்கள்.

ராசவீதியில் உள்ள ஏஆர். எல் வி. நடராசன் செட்டியார் அவர்கள் இல்லத்திலிருந்து இந்தப் பூ அனைவருக்கும் கொடுக்கப்படுகிறது

நம் ஊரில் நம் வீட்டுத் தேவைக்கு நாலு பூக்கட்ட ஆவரம் பூ எடுக்கவும் கண்ணுப் பிள்ளைப் பூத்தேடவும் எங்கெங்கோ செல்வோம். ஆனால் நடராசன் செட்டியார் அவர்கள் வீட்டில் நாங்கள் கண்ட காட்சி எங்களைப் பிரமிக்கச் செய்தது. ஐநூறுக்கும் அதிகமான பூக்கள் (செண்டுகள்) அங்கே கட்டி வைக்கப்பட்டிருந்தன. பூச்செண்டுகளின் ஓர் அணி வகுப்பையே நாங்கள் அங்கு பார்த்தோம். யார் யாருக்குக் கொடுக்கிறோம் என்பதனை ஒரு ஆள் வைத்து எழுதிக் கொண்டு கொடுக்கிறார்கள். மிகச் சிறந்த ஏற்பாடு. கண் கொள்ளாத காட்சி!

### எதிர் பாராத சிறப்பு

சௌத் இந்தியா கார்ப்பரேஷன் ஏஜென்சீஸ் நிறுவனத்தில் அங்கேயே தங்கிப் பணிபுரிபவர்கள் அனைவரையும் ஆண்டுதோறும் பிள்ளையார் நோன்பிற்கு ரெங்கநாத அண்ணன் அவர்கள் தம் இல்லத்திற்கு அழைப்பார்கள் என்றும் மிகச் சிறப்பாக அந்த நிகழ்ச்சியை அவர்கள் கொண்டாடுவார்கள் என்றும் நண்பர் அழகப்பன் அவர்கள் அன்றுகாலையிலேயே கூறியிருந்தார்கள். அதற்குப் பிறகு ரெங்கநாத அண்ணனோடு வெளியில் புறப்பட்டபோது இரவு பிள்ளையார் நோன்பிற்கு நாங்கள் தவறாமல் அவர்கள் இல்லத்திற்கு வர வேண்டும் என்று குறிப்பிட்டார்கள்.

இரவு ஏழரை மணி அளவில் நாங்கள் அங்கு சென்ருேம். ஹாலில் விரித்திருந்த பெரிய ஜமக்காளமும் மற்ற ஏற்பாடுகளும் செட்டி நாட்டில் இருப்பதைப் போன்ற உணர்வையே எங்களுக்கு ஏற்படுத்தின.

இசைத் தட்டுக்கள் பக்திப் பாக்களை ஒலித்துக் கொண்டிருந்தன. நிறுவன நண்பர்கள் வந்து சேர்ந்தார்கள்.

இறை எடுப்பதற்கு ரெங்கநாத அண்ணன் அவர்கள் அம்மானை (அவர்களும் கோவையில் இருக்கிருர்கள்) அழைத்திருந்தார்கள். அவர்கள் வரத்தாமதமானதால் அந்தப் பணியை நான் மேற்கொள்ள வேண்டும் என்று அவர்கள் கூறியபோது நான் வியப்பிற்கும் திகைப்பிற்கும் ஆளானேன். அங்கிருந்தவர்களில் நான் வயதில் மூத்தவன் (வயோதிகன்) அல்ல. எனவே நான் என்ன சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. இறைவன் திருவருளைப் பற்றிச் சொல்கிற பொழுது நினையாது முன்வந்து நிற்பினும் நிற்கும் என்று சொல்வார்கள்.

விநாயகப் பெருமானின் திருவருள் ரெங்கநாத அண்ணன் மூலம் வந்தது என்று எண்ணிய நான் எல்லாருக்கும் இறை எடுத்துக் கொடுக்கும் பொறுப்பை மேற்கொண்டேன். புல்லரிக்கும் நிகழ்ச்சிதான்! அது எதிர்பாராத சிறப்பு மட்டுமல்ல, எல்லையற்ற சிறப்புமாகும் அன்ருே?

பயணத்தின் நிறைவு

இதனை உரிய காலத்தில் கொண்டுவர வேண்டிய பணியும் பழனியப்பா அவர்களுக்கு நீதிமன்றம் 4-1-70ல் திறந்ததால் அந்தப் பணியும் இருந்தனவாதலால் ஜனவரி 3ஆம் நாளுக்குமேல் பயணத்தைத் தொடரமுடியவில்லை. நிலையை அறிந்த நாகப்ப செட்டியார் அவர்களும் ரெங்கநாத அண்ணன் அவர்களும் மாசித் திங்களில் மீண்டும் வாருங்கள். நகரத்தார் வளர்ச்சிக்கு எங்களாலான உதவிகளைச் செய்யக் காத்திருக்கிருேம் என்று கூறி அன்பு விடை தந்தார்கள். அவர்களுக்கு எங்கள் மனமுவந்த நன்றியைக் கூறி ஜனவரி 4ஆம் நாள் அதிகாலை சென்னையை நோக்கி நாங்கள் புறப்பட்டோம்.

எண்ணிப் பார்க்கிறேன்

பயணம் வெற்றிகரமாக அமைய உற்ற துணை புரிந்தவர்களையெல்லாம் மீண்டும் எண்ணிப் பார்க்கிறேன். நாகம்மை நூற்பு ஆலையில் பணிபுரிகின்ற ஷெல்வி ஏஎல் கருப்பன் செட்டியார் (கோட்டையூர்) அவர்கள் செய்த உதவிகள் என் நினைவிற்கு வருகின்றன.

சேலம் ஜவகர் நூற்பாலை உரிமையாளர் பழனியப்ப செட்டியார் அவர்களை நாங்கள் சந்தித்த போது அவர்கள் கூறிய மிகச் சிறந்த யோசனைகளும் கருத்துக்களும் தக்க வழிகாட்டிகளாகும். அப்பொழுது அவர்கள் கூறிய தமிழ்ப் பாடல்களும் மிகக் கடுமையான பாடல்களைக் கூட மிக எளிமையாக அவர்கள் கூறிய முறையும் ஒரு தமிழ்க்கடலைச் சந்திக்கின்ற உணர்வையே எங்களுக்கு ஏற்படுத்தின.

மனமார்ந்த நன்றி!

நகரத்தார் வளர்ச்சிக்கு நாங்கள் மேற்கொண்ட நல்லதொரு பயணத்தின் முகவுரையாக இப்பயணம் அமைந்தது. இந்தப் பயணத்தில் உதவிய பெருமக்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றியறிதலை உரிமையாக்கி இப்போதைக்கு விடைபெறுகின்றேன்.

(பயணம் தொடரும்)

# சங்கப்பலகை

## நகரத்தார் ஐக்கிய சங்கப்

## பொதுக்குழு, செயற்குழுக் கூட்டங்கள்

ஜனவரித் திங்கள் மூன்றும் நாள் ஞாயிற்றுக் கிழமைக்காலே நகரத்தார் ஐக்கிய சங்கத்தின் பொதுக்குழு, செயற்குழுக் கூட்டங்கள் நடைபெற்றன.

பொதுக்குழுக் கூட்டத்தில் கீழ்க்கண்ட உறுப்பினர்கள் கலந்து கொண்டார்கள்.

1. உயர்திரு க. வெ. சித. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள்
2. ,, வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்கள்
3. ,, மு. மு. முத்தையா செட்டியார் அவர்கள்
4. ,, சுப. வயிரவன் செட்டியார் அவர்கள்
5. ,, சு. ராம. பழ சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்
6. ,, அ. கணபதி செட்டியார் அவர்கள்
7. ,, மு. சிவலிங்கம் செட்டியார் அவர்கள்
8. ,, மு. அழகப்பன் அவர்கள்
9. ,, அ. சேதுராமன் அவர்கள்
10. ,, அ. முருகப்ப செட்டியார் அவர்கள்
11. ,, சுப. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள்
12. ,, சுப. சண்முகம் செட்டியார் அவர்கள்
13. ,, மெ. சிதம்பரம் செட்டியார் அவர்கள்
14. ,, பெரி. அருணாசலம் செட்டியார் அவர்கள்
15. ,, சுப. சிதம்பரம் செட்டியார் அவர்கள்
16. ,, லெ. மாணிக்கம் செட்டியார் அவர்கள்
17. ,, சுப. மாணிக்கம் செட்டியார் அவர்கள்
18. ,, குமு. முருகப்பன் அவர்கள்

உயர்திரு க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் தலைமையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. 16-8-70ல் நடைபெற்ற பிரதிநிதிகள் அவைக்குழு கூட்ட நடவடிக்கை, செயலாளர் திரு. குமு. முருகப்பன் அவர்களால் வாசிக்கப் பெற்று ஏற்றுக் கொள்ளப்பெற்றது.

செயற்குழுவிலிருந்து கீழ்க்கண்ட 10 உறுப்பினர்கள் சுற்று முறைப்படி விலகிக் கொண்டதால், ஏற்பட்ட இடங்களுக்கு அவர்களே திரும்பவும் உறுப்பினர்களாக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்.

1. உயர்திரு மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்
2. ,, சு. ராம. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்

3. உயர்திரு வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்கள்
4. ,, சுப. சிதம்பரம் செட்டியார் அவர்கள்
5. ,, எஸ். சுந்தரம் செட்டியார் அவர்கள்
6. ,, சொ. வள்ளியப்ப செட்டியார் அவர்கள்
7. ,, சி. செல்லப்ப செட்டியார் அவர்கள்
8. ,, அ. கணபதி செட்டியார் அவர்கள்
9. ,, மு. மு. முத்தையா செட்டியார் அவர்கள்
10. ,, வெ. கண்ணன் அவர்கள்

விதிமுறைகளின்படி நகரத்தார் சங்கங்களால் நியமிக்கப்பெற்ற செயற்குழு உறுப்பினர் சுற்றுமுறையில் விலகுவதில்லை. அந்தச் சங்கங்கள் மாற்றி நியமனம் செய்யாத வரை அவர்கள் செயற்குழுவில் பதவி வகிப்பார்கள். அவ்விதம் நியமிக்கக் கோரி எல்லா சங்கங்களுக்கும் எழுதியிருந்ததற்குத் தென் ஆற்காடு, ஈரோடு சங்கங்கள் தவிர மற்ற சங்கங்களிலிருந்து பதில் வராததால், மேற்படி சங்கங்களின் சார்பாக செயற்குழுவில் ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்படாமல் தொடர்ந்து பதவி வகித்துவரும் உறுப்பினர்களையே நியமன உறுப்பினர்களாக ஏற்கப்பட்டது. அவ்விதம் நகரத்தார் சங்கங்களின் பிரதிநிதிகளாகக் கீழ்க்கண்டவர்கள் செயற்குழுவில் அங்கம் வகிப்பவர்களாக ஒப்புக் கொள்ளப் பெற்றார்கள்.

1. உயர்திரு ராம. அருணாசலம் செட்டியார் அவர்கள் சென்னை நகரத்தார் சங்கம்
2. ,, ஆவி. க. ஆவிச்சி செட்டியார் அவர்கள் நகரத்தார் சங்கம், திருச்சி
3. ,, மெ. செ. உடையப்ப செட்டியார் அவர்கள் நகரத்தார் சங்கம், சேலம்
4. ,, சு. வி. நா. நாகப்ப செட்டியார் அவர்கள் நகரத்தார் சங்கம், கோவை
5. ,, தி. மாணிக்க வாசகம் செட்டியார் அவர்கள் நகரத்தார் சங்கம், மதுரை
6. ,, சுப. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம், ஈரோடு
7. ,, டி. அருணாசலம் செட்டியார் அவர்கள் தென்னார்க்காடு நகரத்தார் சங்கம், சிதம்பரம்

இத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

அந் நிகழ்ச்சியைத் தொடர்ந்து செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. அதில் கீழ்க் கண்ட உறுப்பினர்கள் கலந்து கொண்டார்கள்.

1. உயர்திரு க. வெ. சித. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள்
2. ,, அ. மு. மு. அருணாசலம் ,, ,,
3. ,, வ. செ. சிவலிங்கம் ,, ,,
4. ,, மு. மு. முத்தையா ,, ,,
5. ,, சுப. வயிரவன் ,, ,,
6. ,, சு. ராம. பழ. சுப்பிரமணியன் ,, ,,
7. ,, அ கணபதி ,, ,,
8. ,, சுப. சிதம்பரம் ,, ,,

9. உயர்திரு சுப. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள்
10. ,, சுப. சண்முகம் ,, ,,
11. ,, சுப. மாணிக்கம் ,, ,,
12. ,, குமட முருகப்பன் ,, ,,

1970ம் ஆண்டின் நிகழ்ச்சிகள் பற்றிய அறிக்கை சங்கத்தின் செயலாளர் திரு. கும. முருகப்பன் அவர்களால் வாசிக்கப்பெற்றது. 31-12-70உ முடிய சங்க வரவு செலவுகணக்கு, பொருளாளர் திரு சுப. வயிரவன் செட்டியார் அவர்களால் வாசிக்கப்பெற்று ஒப்புக் கொள்ளப் பெற்றது.

உயர்திரு கருமுத்து தியாகராச செட்டியார், அ. மு. மு. அருணசலம் செட்டியார், க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் பெயர்களை நடப்பு ஆண்டிற்கு மீண்டும் துணைத் தலைவர்கள் பதவிக்கு திரு. சுப. சண்முகம் செட்டியார் அவர்கள் முன்மொழிய, திரு சுப. வயிரவன் செட்டியார் அவர்கள் வழிமொழிய ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப் பெற்றது.

செயலாளர் பதவிக்கு திரு. கும. முருகப்பன் பெயரையும், துணைச் செயலாளர் பதவிக்கு திரு. ஆவி. க. தியாகராசன் செட்டியார் அவர்கள் பெயரையும், பொருளாளர் பதவிக்கு திரு. சுப. வயிரவன் செட்டியார் அவர்கள் பெயரையும், திரு. க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் முன்மொழிய திரு. அ. கணபதி செட்டியார் அவர்கள் வழி மொழிய ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

16-8-70உ திருத்தப்பட்ட விதிகளின்படி செயற்குழுவில் உறுப்பினராகியுள்ள நன்கொடையாளர் உயர்திரு. மு. சித. முத்தையா செட்டியார் அவர்களை சங்கத்தின் துணைத்தலைவர் பதவிக்கு திரு. க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் முன்மொழிய, திரு. மு. மு. முத்தையா செட்டியார் அவர்கள் வழிமொழிய ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள்.

காரைக்குடி சமூக சீர்திருத்த நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சபையின் 20-10-70உ கூட்ட நடவடிக்கை அடங்கிய கடிதத்தையும் மதுரை நகரத்தார் சங்கத்திற்கு அனுப்பிவைக்கும்படி முடிவு செய்யப் பெற்றது.

வேலையில்லாமலிருக்கும் நம் இளைஞர்களுக்கு வேலைவாய்ப்புக்கிட்டுவதற்கு ஏற்றவகையில் தொழிற்பயிற்சி நிலையம் (Industrlal Training School) ஒன்று ஏற்படுத்தி, அவர்களுக்கு அதில் பயிற்சியளித்து வேறு நிலையங்களில் வேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்க முயற்சி செய்யலாமென ஆலோசிக்கப்பெற்றது. அதற்கானதொரு திட்டத்தை தயாரிக்க கீழ்க்கண்டவர்களைக் கொண்ட கமிட்டி நிறுவப் பெற்றது.

1. உயர்திரு மு. மு. முத்தையா செட்டியார் அவர்கள்
2. ,, சு. ராம. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்
3. ,, அ. கணபதி செட்டியார் அவர்கள்
4. ,, அரு. லெட்சுமணன் அவர்கள்
5. ,, ராம. பழநியப்பன் அவர்கள்
6. ,, க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள்
7. ,, கும. முருகப்பன் அவர்கள்

கால் ஊனமாயுள்ள அரிமளம் பெரி. அழகப்பனுக்கு கையால் சுத்தி ஓட்டும் சைக்கிள் வாங்குவதற்கு ரூ. 250/- கொடுக்க விதிமுறைகள் இடந்தருமா என கணக்குத் தணிக்கையாளரிடம் கேட்டு, கொடுக்கலா மெனத் தீர்மானிக்கப் பெற்றது. அவ்வாறு இடமில்லாவிடில் இந்தத் தொகையை வ. செ சிவலிங்கம் செட்டியார் அவர்கள் கொடுப்பதாக வாக்களித்துள்ளார்கள்.

நம்மவர்கள் லேவாதேவித் தொழிலுக்கு பாங் கடனுதவி குறைப்பு சம்பந்தமாக ஈரோடு நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கச் செயலாளர் திரு. முத்துக்கருப்பன் அவர்கள் கடனுதவி தாராளமாகக் கிடைக்க நடவடிக்கை எடுக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர்களை விரிவான விவரம் ஒன்று அனுப்பும்படியும், தென்னிந்திய வர்த்தக சபை மூலம் அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வதெனவும் முடிவு செய்யப் பெற்றது.

## திருச்சி நகரத்தார் சங்க ஆண்டு விழா

திருச்சி நகரத்தார் சங்க 23 ஆம் ஆண்டு விழா ஜனவரித் திங்கள் 24 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை மாலை 4 மணி அளவில் நகர விடுதி கட்டிடத்தில் தொடங்கிற்று.

விழாவினைச் சிறப்பிக்க வந்த பெருமக்களோடு தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவ நா த ம் அவர்கள் வந்தது மேலும் பெருஞ் சிறப்பைத் தந்தது. தேனீர் விருந்திற்குப் பிறகு விழா நிகழ்ச்சிகள் தொடங்கின.

இறைவணக்கத்திற்குப் பிறகு சங்கச் செயலாளர் எஸ். சுந்தரம் அவர்கள் அனைவரையும் வரவேற்று ஆண்டு அறிக்கையைப் படித்தார்கள். சங்கத் தலைவர் ஆ. வி. க. ஆவிச்சி செட்டியார் அவர்கள் உரையாற்றிய பொழுது, நம் நாட்டு அரசு சுதந்திர அரசாக விளங்குவதால்பெரியவர்களை மதித்துப்போற்றுகின்ற தன்மையுடையதாக விளங்குகின்றது. இந்தியா லெதர் கார்ப்பரேஷன் திரு. ஆ. நாகப்ப செட்டியார் அவர்களுக்கு பத்ம ஸ்ரீ பட்டம் வழங்கிச்சிறப்பித்துள்ளது என்று குறிப்பிட்ட அவர்கள் நம் சமூகத்தினர் வட்டித் தொழில்மட்டும் அல்லாது எல்லா தொழில்களிலும் ஈடுபடவேண்டும் என்று வலியுறுத்தினார்கள். இந்த விழாவில் நாகப்ப செட்டியார் அவர்கள் தலைமை தாங்க இருப்பதும் சோம.லெ. அவர்களும் டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களும் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களும் கலந்து கொண்டு உரையாற்ற இருப்பதும் இச்சங்கத்திற்கு மலேசிய நாட்டில் முப்பதினாயிரம் ரூபாய் வசூலித்துத் தந்த கண்டனூர் "ஸ்டார்" அருணாசலம் செட்டியார் அவர்களுக்கு விழாத் தலைவர் அவர்கள் பொன்னாடை போர்த்த இருப்பதும் மிகச் சிறப்புடையனவாகும் என்று குறிப்பிட்டார்கள்.

### விழாத்தலைவர் உரை

நாகப்ப செட்டியார் அவர்கள் தலைமையேற்று அருணாசலம் செட்டியார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். அவர்கள் உரையாற்றுகிறபொழுது இளைஞர்கள் சமூகத்திற்கு வேண்டிய மிகச் சிறந்த கருத்துகளை வெளியிட்டார்கள்.

"எந்தத் துறையில் நம்மவர்கள் ஈடுபட்டாலும், அந்தத் துறையில் மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்ற உறுதியும் திறமையும்

இருக்கின்றன. எனவே நம் இளைஞர்கள் சிறு சிறு தொழில்களில் உறுதியுடன் ஈடுபடவேண்டும்.

நாலு பேர் பத்துப் பேர் சேர்ந்து தொழில்களைத் தொடங்கலாம். நம் சமூக இளைஞர்களில் பலர் தொழிற் கல்வி கற்று வருவதால், தொழில் செய்வதற்கு நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. சிறு தொழில்களுக்கு அரசினரிடம் கடன் உதவி பெற வாய்ப்பிருக்கிறது. ஒரு ரூபாய்க்கு 3 காசு வட்டி வாங்கினால்அது எல்லோருக்கும் தெரியும் ஆனால் அதே சமயம் ஒரு ரூபாய்க்கு வாங்கும் சாமானை இரண்டு ரூபாய்க்கு விற்றால் அதில் உள்ள லாபம் யாருக்கும் தெரிவதில்லை. பெரியவர்கள் எவ்வாறு தொழிலில் முன்னேறினார்கள் என்பதைச்சிந்தித்துப் பார்த்து அந்த வழியில் நடந்து முன்னேற வேண்டும். தொழில் செய்ய விரும்புகிற இளைஞர்களுக்கு எத்தகைய தொழில்கள் தொடங்கலாம் என்பது பற்றியும் சங்கத்தின் மூலம் என்ன என்ன உதவிகள் செய்யமுடியும் என்பது பற்றியும் சங்கங்கள் விளக்கவேண்டும்'' என்று குறிப்பிட்டார்கள்.

## டாக்டர் உரை

சுப. அண்ணாமலை அவர்கள் சிறப்புரையாற்றுகிற பொழுது ''மற்றச் சங்கங்களைவிடத் திருச்சி நகரத்தார் சங்கம் பழமையானது. நம் மரபினர் பழைய மரபுகளை விடாமல் பாதுகாக்கும் தன்மையுடையவர்கள். நம்மவர்கள் கூடும் போது நாம் வளர என்ன வாய்ப்புகள் உள்ளன என்பது பற்றிய பேச்சிற்கே முதலிடம் கொடுக்க வேண்டும். தனியார் தொழில்களை விட கூட்டுறவுத் தொழில்களுக்கு வரி குறைவு.

எனவே கூட்டுறவு முறையில் தொழில்களைத் தொடங்க வேண்டும். அதோடு மக்களுக்கு இன்றியமையாத தேவைப் பொருட்கள் என்ன என்பதை அறிந்து அத்தகைய பொருட்களை விற்பனை செய்யும் பணியினை மேற்கொள்ள வேண்டும். விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும், உதவி புரிய வேண்டும் என்ற எண்ணமும், கூடிவாழ வேண்டுமென்ற நோக்கமும் எல்லார் மனதிலும் பதிந்தால் முன்காலத்தைப்போல நாம் மீண்டும் மன்னர் பின்னோராக வாழலாம்'' என்று குறிப்பிட்டார்கள்.

## உலகம் சுற்றிய தமிழர் உரை

''ஏழை மாணவர்களுக்குப் படிக்க உதவ வேண்டும் என்ற எண்ணம்முதலில்திருச்சியில்தான் தோன்றியது. பல நகர விடுதிகள் சீர்திருத்திக் கட்டவேண்டிய நிலையில் உள்ளன. நம் மரபினர்கள் முக்கியமான ஊர்களில் நகர விடுதிகள் கட்டுவது மிகவும் போற்றத்தக்கது. டில்லியிலும் பம்பாயிலும் நகரவிடுதிகள் கட்டப்படவேண்டும். அதற்கான முயற்சியை காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த முயற்சிக்கான உதவிகளை நம் குலப் பெருமக்கள் அனைவரும் மனம் உவந்து செய்ய வேண்டும்'' என்று சோம. லெ. அவர்கள் தம் உரையில் குறிப்பிட்டார்கள்.

## உள்ளூர் நகரத்தார் உரை

திருச்சிராப் பள்ளியில் இந்தியன் வங்கியில் பணி புரிகின்ற சி. டி. சிதம்பரம் அவர்கள் உரையாற்றிய பொழுது, எல்லாக் கூட்டங்களுக்கும் ஆச்சிமார்கள் அழைக்கப்படவேண்டும். அவர்களும் அவசியம் வரவேண்டும். அப்பொழுது தான் எதிர்பார்க்கிற



செயலாளர் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்துகிருர்கள். ஆ. நாகப்ப செட்டியார் அவர்கள் தலைமை உரையாற்றுகிருர்கள். சங்கத் தலைவர் அவர்கள் கருத்துரை தருகிருர்கள். சோமலெ அவர்கள் சிறப்புரையாற்றுகிருர்கள்.

மாற்றங்கள் ஏற்பட வழியுண்டு என்று குறிப்பிட்டார்கள். கிருஷ்ணன் அவர்கள் பேசும்போது திருச்சிராப்பள்ளியில் நம்மவர்களுக்கு என்று பள்ளியும், கல்லூரியும் வேண்டுமென்று வலியுறுத்திஞர்கள்.

## தமிழ்க்காவலர் உரை

''கோவில் கட்டுதல், கும்பாபிஷேகம் செய்தல், சேமித்தல், சிறப்பாகச் செலவு செய்தல், முதலிய வழிகளிலேயே கடந்த நூறு ஆண்டுகளாக நகரத்தார் மரபினர் வாழ்ந்து வருகின்றனர். அவர்களுடைய அரிய பண்புகளை நோக்கி நானும் அவர்களில் ஒருவனுகவே ஆகிவிட்டேன் காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கம் தோன்ற நான், ராய. சொ., சொ.முருப்பா முதலியவர்களுடன் பெரும் பங்கு கொண்டிருந்தேன். பழம் பெருமையைப் பேசுவதால் பயன் இல்லை. அப்பெருமையை மீண்டும் பெறுவதற்கு நாம் எந்த எந்தப் பணிகளில் ஈடுபட வேண்டும் என்பதனை சிந்தித்து, நகரத்தார் சமூகத்தினர் அந்தப் பணிகளில் ஈடுபடவேண்டும்'' என்று கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தம் உரையில் குறிப்பிட்டார்கள்.

செயலாளர் சுந்தரம் அவர்கள் நன்றி கூற விழா இனிது நிறைவேறியது.



பக்கத்துப் படங்களில், விழாவிற்கு வந்திருந்த ஆண்களில் ஒரு பகுதி, பெண்களில் ஒரு பகுதி. இடையில், டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள் சிறப்புரை நிகழ்த்துகிறார்கள்.

## பேரவைக்கூட்டம்

அதன் பின்னர். நடந்த பேரவைக்கூட்டத்தில். பொருளாளர். பி. எஸ் பி. எல். மெய்யப்பன் அவர்கள் வரவு செலவு கணக்கு விபரங்களை வாசித்தார்கள். அடுத்து, கீழ்க்கண்டவாறு சங்க பொறுப்பாளர்களும். செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்.

தலைவர்: AR. அண்ணாமலை துணைத்தலைவர்: ''ஸ்டார்'' அருணாசலம் செட்டியார். செயலாளர்: ஆர்எம். அழகப்பன். எஸ். சுந்தரம். பொருளாளர்: பி. எஸ். பிஎல். மெய்யப்பன். செயற்குழு உறுப்பினர்: 1. ஆவி. க. ஆவிச்சிசெட்டியார், 2. ஆர்.எம். நாராயணன், 3. அழகு. அழகப்பன், 4. உடையப்ப செட்டியார், 5. எஸ். ஒ. சண்முகம், 6. ஆர்எம். கணபதி, 7. எம். செல்லப்பன், 8. எஸ். ஏ. ஆர். பழனியப்பன், 9. ராமசாமி. கல்விக்குழு செயலாளர். எஸ். பெரியணன்.

செய்தி: காரைக்குடி எஸ். அண்ணாமலை.

# சித்தாந்த மணிமொழிச் செல்வரின்

## முதலாண்டு நினைவு நாள் விழா

செட்டியார் சமத்தும் செம்மை மாருத சிரிப்பும் பண்டிதமணியாரின் பாங்கான தமிழும் சைவத் திறமும் அறவுணர்வும் கொண்டு வாழ்ந்த மகிபாலன் பட்டி சித்தாந்தமணிமொழிச்செல்வர் சி. இராம. ராமசாமிச் செட்டியார் அவர்கள் இறைவன் பாதங்களை அடைந்து ஓர் ஆண்டு நிறைவதை ஒட்டி அவர்கள் நினைவு நாளினை, பிப்ரவரி ஐந்தாம் நாள் வெள்ளிக்கிழமை மதுரைத் திருவள்ளுவர் கழகத்தினர் மிகச் சிறப்பாக, பெரிய தொரு விழாவாகக் கொண்டாடினர்.

மாலைஏழுமணி அளவில் திரு முத்தையா தேசிகர் அவர்கள் இறை வணக்கம் பாட விழாத் தொடங்கிற்று.

வரவேற்புரை நிகழ்த்திய வி. பழநியப்பன் பி. ஏ. அவர்கள். பக்தியும் தமிழ்ப் பற்றும் நிறைந்த மணிமொழிச் செல்வரின் நினைவு நாள் விழா மீனாட்சி அம்மன் ஆலயத்தில் விளங்குகின்ற, 'திருவள்ளுவர் கழகத்தில்' நடப்பதும் இந்த விழாவில் அவர்களுக்கு மிகவும் வேண்டியவர்கள் கலந்துகொள்வதும் பொருத்தமுடையது என்று கூறி அனைவரையும் வரவேற்ருர்கள்.

### உரை வேந்தரின் தலைமை உரை

விழாவிற்குத் தலைமை தாங்கிய ஔவை துரைசாமிப்பிள்ளையவர்கள், "நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் நற்சாந்துபட்டி பெ சிதம்பரம் செட்டியார் அவர்கள் இல்லத்தில் தான் முதன் முதல் திரு சி. ராம அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் பண்பு மறக்க முடியாதது. அவர்களுடைய புலமையுடன் கூடிய நட்புத் திறம் மிகவும் பராட்டுதற்கு உரியது. அவர்கள் செல்வராக வாழ்ந்ததைவிட இலக்கியச் செல்வராக வாழ்ந்தார்கள் என்பதே பொருந்தும் என்று குறிப்பிட்டார்கள்.

### உருவப்படத்திறப்பு

சி. ராம, அவர்கள் திருஉருவப்படத்தினை ஈரோடு எஸ். சென்னினியப்ப முதலியார் அவர்கள் திறந்து வைத்து உரை ஆற்றும் போது அவர்களுக்கும் மணிமொழிச் செல்வருக்கும் இருந்த ஆழ்ந்த பற்றைப் புலப்படுத்தினர்கள்.

"பண்டித மணி திருவாசகத்திற்கு உரை எழுத என்றே பிறந்தார்கள். அவர்களிடம் தமிழ் பயில என்றே சி. ராம அவர்கள் பிறந்தார்கள். நானும் சி. ராம. அவர்களும் நீரும் மீனும் போல வாழ்ந்தவர்கள்" என்று மிகுந்த உருக்கத்தோடு குறிப்பிட்டார்கள்.

### சிதம்பரனரின் உரை.

அண்ணல் சி. ராம. அவர்களின் நினைவு மலரைச் சன்மார்க்க சபைத் தலைவர். பழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் வெளியிட்டு உரையாற்றினர்கள் சி. ராம. அவர்களைப் பற்றி, புலவர்களும், அறிஞர்களும் நண்பர்களும் வழங்கிய பாட்டும் உரையும் உள்ள இந்த நூலை வெளியிடுவதில் நான் பெருமையடைகிறேன். இவர்கள் எங்கள் சபை

யின் மாணவர்கள், அதோடு, இவர்களது குண நலன்களை யறிந்த எங்கள் பெரியோர்கள் மாப்பிள்ளையாகவும் ஆக்கிக் கொண்டார்கள்.

சி. ராம. அவர்கள் என்னுடைய சிறந்த நண்பர். எல்லாரிடமும் எளியமையாகப்பழகும் பண்புடையவர். புலவர்களிடம் பேரன்புடைய வர். உற்றருக்கும், மற்றோருக்கும் உதவும் இயல் புடையவர். அவர்களைப் போற்றுவது, அறத்தைப் போற்றுவதாகவே ஆகும்'' என்று குறிப்பிட்டார்கள்.

## முதல்வர் உரை

மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர், வெ. சு. அழகப்பன் அவர்கள் சிறப்புரையாற்றும் போது, "புகழுக்கு உரியவனே வாழ்பவன். வறியவர்களுக்கு வழங்குபவனேபுகழுக்குஉரிய வன். எத்தனையோ செல்வர்களிருக்கிறார்கள், அவர்களெல்லாம் சி. ராம அவர்களைப் போல, புகழ்பெறவில்லை'' என்று குறிப்பிட்டார்.



சித்தாந்த மணிமொழிச் செல்வரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து அண்ணலார் சென்னியப்ப முதலியார் அவர்கள் உரையாற்றுகிறார்கள்.

## அண்ணுமலையார் உரை

மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர். சுப. அண்ணுமலை அவர்கள் அடுத்து உரையாற்றினுர்கள்.

"எல்லாரும் பொருள் கொண்டு சென்று பொருள் தேடிவருவார்கள். ஆனால் மணிமொழிச் செல்வர் அவர்கள் - மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம் என்ற கருத்தை மனத்திற் கொண்டு சைவத்தை தம்முடன் கொண்டு சென்று மலைநாட்டில் சைவ மன்றம் தோற்றுவித்த பெருமைக்கு உரியவர்கள்" என்று குறிப்பிட்டார்கள்.

## மாணிக்கவாசகம் உரை

தியாகராசர் நன்முறை உயர் நிலைப் பள்ளித் தமிழாசிரியர் கரு. மாணிக்கவாசம் அவர்கள் உரையாற்றும் போது, "சி. ராம. அவர்கள் நினைவு அனைவரையும் புனிதப்படுத்தும் தன்மையை உடையது. மாதொரு பாகனைப் போலச் சைவமும் தமிழும் சி. ராம அவர்களுக்கு இரண்டறக் கலந்ததாகவே விளங்கியது" என்று குறிப்பிட்டார்கள்.

## தலைவர் முடிவுரை

சி. ராம வரலாற்றை வேகுப்பட்டி கவிஞர் இலக்குமணன் செட்டியார் அவர்கள் மிகச் சிறப்பாக இயற்றியுள்ளார்கள். அந்தப் பாடல்கள் நினைவு மலரில் இடம் பெற்றுள்ளன. அதனை அனைவரும் படிக்க வேண்டுகிறேன். சி ராம அவர்களின் நினைவு என்றும் மறக்க இயலாதது" என்று தலைவர் அவர்கள் தம் முடிவுரையில் குறிப்பிட்டார்கள்.

## அண்ணலின் நன்றி உரை

மணிமொழிச் செல்வரின் நினைவு விழாவிற்குச் சன்மார்க்க சபையே வந்திருப்பது போல அதில் தொடர்புடைய பெருமக்கள் எல்லாரும் வந்துள்ளார்கள்.சி. ராம. அவர்களுடைய உளம் தோய்ந்த பெருமகனுர் சென்னியப்ப முதலியார் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்துள்ளார்கள். பண்டித மணியாரின் செல்வத் திருமக்கள் வந்துள்ளார்கள். திருவள்ளுவர் கழகத்தார் இந்த விழாவைக் கொண்டாடுகிறுர்கள். இவ்வாறு நான்கு வகையாலும் மற்றும் பல பெருமக்கள் வந்திருப்பதாலும் இந்த விழா மிக நிறைவுடையதாக விளங்குகின்றது என்று நன்றி உரையில் குறிப்பிட்ட பேராசிரியர்-டாக்டர் தமிழண்ணல் இராம பெரிய கருப்பன் அவர்கள்—சன்மார்க்க சபைக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரிக்குப் பெண்கள் உணவு விடுதி கட்டும் முயற்சிக்குத் துணையாக ரூபாய் பதினையாயிரம் கொடுக்க சி. ராம உடன்பட்டிருந்தார்கள். அத்தொகையைக் கொடுக்கவும் சைவ சித்தாந்த வளர்ச்சிக்கு வகுப்புக்கள்நடத்துவதற்கு ஓர் அறக்கட்டளையை நிறுவ, திருவள்ளுவர் கழகத்திற்கு ரூபாய் மூவாயிரம் கொடுக்கவும் சிராம. அவர்களின் தவப்புதல்வர் நாகப்பன் அவர்கள் உடன்பட்டுள்ளார்கள்என்றுஅறிவித்தார்கள். இரவு ஒன்பதரை மணியளவில்விழா இனிது நிறைவேறியது.

விழாவிற்கு வந்திருந்தவர்கள் அனைவருக்கும் நாகப்பர் அவர்கள் இரவு சிற்றுண்டி விருந்தினை ஏற்பாடு செய்திருந்தார்கள். அது நகர விடுதியில் நடைபெற்றது.

செய்தி : நாகவல்லி

# மண அரங்கம்

## கோனுபட்டில் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா!

அன்பு உள்ளமும் அற உணர்வும் கொண்ட செல்வப் பெருந்தகையாளர் கோனுபட்டு சு. முரு ச. முருகப்ப செட்டியார் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா 19—12—70ம் நாள் கோனுபட்டில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

மணமக்களான முருகப்ப செட்டியார் தெய்வானை ஆச்சியை பல் துறைப் பெருமக்களும் மனமுவந்து வாழ்த்தினர்.

அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவினை ஒட்டி தோத்திரத் திரட்டு என்ற நூல் வெளியிடப்பெற்றது.



அறச்செல்வர் மகாலிங்கம் அவர்கள் புனித நீராட்டுகிருர்கள்

## புதுமைத் திருமணம்

இராமநாதபுரம் மாவட்டம் கண்டரமாணிக்கம் ஸ்ரீதண்டாயுத பாணி துவக்கப் பள்ளி, உயர் நிலைப் பள்ளி நிர்வாகி. கல்விக் காவலர் திரு. பெரி. பெரி. சுப பெரிய கருப்பன் செட்டியார் மகள் செல்வி வள்ளியம்மைக்கும் கண்டனூர் திரு. அரு. கரு. கருப்பன் செட்டியார் மகன் செல்வன் வெங்கடாசலத்திற்கும் 8—11—70ம் நாள் ஞாயிற்றுக்கிழமைக் காலை பத்துமணி அளவில் குன்றக்குடி முருகன் சந்நிதியில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

மதுரை விசாலாட்சி நூற்பாலை அதிபர் திரு லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடை பெற்றது. தேனி. உ. ராம. உ. உடையப்ப செட்டியார் அவர்கள் மணமக்களை வாழ்த்திப் பேசினர்கள். "கணவன்மார்களின் ஒற்றுமைக் குறையால் வாழ வழியற்று வாடும் இளம் பெண்கள் நல்வாழ்வு பெற இத்தகைய திருமணங்கள் (மணமகள் விவாகரத்துப் பெற்றவர்) நடைபெற வேண்டும் என்றும் காலத்திற்கேற்ற முறையில் இந்த மாற்றம் தவிர்க்க முடியாததாகி விடுகின்றது என்றும் அந்த முறையில் நடைபெறுகின்ற இந்தத் திருமணத்தை மிகவும் வரவேற்பதாகவும் குறிப்பிட்டார்கள்.

சென்னை திரு. சுப. தேனப்ப செட்டியார் மதுரை எஸ். பி. எம். மெடிகல் ஹால் திரு. ஆர். எம். ஏ ஆர். சுப்பிரமணியம்செட்டியார் ஆகியவர்களிடமிருந்தும் இன்னும் பல பெருமக்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்தன.



மணமக்களோடு, விழாவிற்கு வந்திருந்த பெருமக்கள்.

# மாசி மகத் திருநாள்

நம் பெருமக்கள் இறையருளை முன் வைத்தே எந்தக் காரியத்தையும் துவங்குவர். செயலாற்றுவர். பிள்ளையார் சுழி, சிவமயம் மூலம் விநாயகரையும், சிவனையும் நினைந்து முருகப் பெருமானின் வழித்துணையும், தொழில் துணையும்கொண்டே பொருள் துணை பெற்றனர்; பெற்று வருகின்றனர். பெரும்பான்மையாகத் தொழில் புரியும் இடமெல்லாம் முருகப்பெருமானின் துணைவேண்டி வழித் துணையாக வேல்கொண்டு சென்று தெண்டாயுதபாணி கோவில் நிறுவி, மகமை எடுத்து திருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடி, வருகின்றார்கள். குறிப்பாகப் பர்மாவிலும், மலேயாவிலும், இலங்கையிலும் சென்னையிலும் தெண்டாயுதபாணி கோவில் கட்டி பெரும் திருவிழாக்களும் எடுத்துவருகின்றார்கள்.

சென்னை மாநகரம் அயல்நாடுகளுக்குச் செல்லும் வழிநிலையாகவும், தொழில் துறைக்கு ஓர் மையமாகவும், அயல் நாடுகள் உள் நாட்டுக் கொடுக்கல் வாங்கல்களுக்கு ஓர் கேந்திரமாகவும் விளங்கி வந்துள்ளது. அதனால் தொழில்வளம் சிறந்திருந்த காலத்தில் சுமார் 150 அடர்த்திக் கடைகளுக்குமேல் சென்னையில் பெருமளவில் அயல்நாடுகள் உள் நாட்டுக் கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டிருந்தன. இவை யன்றியில் சைத்தறி ஜவுளி ஏற்றுமதி வாணிபத்திலும் நம்பவர் பங்கு பெற்றிருந்தனர். இவர்கள் எல்லோரும் ஆண்டு தோறும் மகமை எடுத்துத் தெண்டாயுதபாணி கோவிலில் நவராத்திரிவிழா பத்து தினங்களும், சூரசம்மார விழா ஆறு தினங்களும், மாசிமக விழா ஐந்துதினங்களும், பிள்ளையார் நோன்பும் சிறப்புறக் கொண்டாட ஆரம்பித்தனர். மகமை ரூ. 100க்கு அரையணா (தற்போது மூன்று பைசா) வீதம் எடுத்துச் சேரும் தொகைஆண்டிற்கு ரூபாய் நாற்பதாயிரம் முதல் ஐம்பதாயிரம் ஆகும். இவற்றைக் கொண்டு சுவாமிக்கு நகைகளும், சொத்துக்களும் சேர்த்து அறப்பணிகளும் செய்துவந்தனர். ஆண்டுதோறும் சேரும் தொகைகளையும், கடைகளின் ஆதாரத்திற்கு ஏற்ப ரூ. 25,000; ரூ. 15,000; ரூ. 10,000; ரூ. 7,500; ரூ. 5,000; ரூ. 2,500; என வட்டிக்கு அடைத்து அதனைப் பெருக்கி வந்தனர். ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு மார்க்கா மேற்பார்வையில், கோவில் நிர்வாகம் நடைபெற்று வந்தது. பழைய வீட்டுத் தெண்டாயுதபாணி தேவகோட்டையார் மேற்பார்வையில் 34, பவளக்காரத் தெருவிலும், புதுவீட்டுத் தெண்டாயுதபாணி மற்ற ஊர் நகரத்தார்களின் மேற்பார்வையில் 27, பவளக்காரத் தெருவிலும் இருந்து வருகின்றன.

சமயக்குரவர் நால்வர், நாயன்மார், பட்டினத்தார் ஆகியோரால் பாடப்பெற்ற தலம் திருவொற்றியூர். இங்கு ஆண்டுதோறும் மாசி மாதம் மகத்திருவிழா பத்து நாள்

உற்சவமாகக் கொண்டாடப் படுகிறது. ஆரும் திருநாள் முதல் பத்தாவது நாள் வரை மக்கள் பெருமளவில் திருவிழாக் காணக் கூடுவர் இப் பக்தகோடிகளுக்கு அன்னம் வழங்கி அப்புண்ணியத்தைப் பெற எண்ணிய நம் மக்கள் திருவொற்றியூரில் ஐந்து நாள் பூசையிட்டு அன்னதானம் செய்து வரத் தொடங்கினர்கள். இரு வீட்டுத் தெண்டாயுதபாணிக் கடவுளும் ரதத்தில் சென்னையிலிருந்து திருவொற்றியூர் சென்று ஐந்து நாள் பூசைக்குப் பின் சென்னைக்கு எழுந்தருளுவது வழக்கம்.

சிவபெருமான் சுந்தரர் பெருமானுக்கு மகிழ மரத்தடியில் காட்சியளித்த விழா சிறப்பாகவும் அறுபத்து மூவர் விழாவாகவும் அங்கு கொண்டாடப்படுகிறது. அன்று தினம் (மகிழடி சேவை) நான்காம் நாள் மகேஸ்வர பூசையில் பெருமளவில் அன்னதானம் செய்து வருகிருர்கள். நம் மக்கள் பலரும் அன்று கரும்புத்தொட்டில் கட்டித் தெண்டாயுதபாணிக் கடவுளை வலம் வந்து ஆசி பெறும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். ஆண்டு தோறும் இக்கரும்புத் தொட்டில்கள் பெருகிவருகின்றன. சென்ற ஆண்டு சுமார் 90 தொட்டில்கள் கட்டப்பெற்றன. அன்று மாலை 3 மணிக்கு மேல் பூசைக்குரிய சிறப்பு அம்சமான 'ஏலம்' மிகவும் விறுவிறுப்பாக இருக்கும். இரவு கடற்கரையில் பட்டினத்தார் அடங்கிய பட்டினத்தார் கோவிலில் குருபூசையும் கோவில் முற்றத்தில் நிலாவிருந்தும் சிறப்பாக இருக்கும். மறுநாள் மாசி மகத்தன்று பகல் பூசைக்குப்பின் சென்னைக்கு எழுந்தருளுதலாகும்.

திருவொற்றியூரில் பூசையிடும் விடுதி ஆரம்பத்தில் சிறு வீடாக இருந்தது. பின்னர் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் லட்சரூபாய் செலவில் இப்போதுள்ள நகர விடுதி கட்டப்பெற்றது. புது வீட்டுத் தெண்டாயுதபாணிக் கடவுளுக்கு வெள்ளி ரதம் சுமார் 35 ஆண்டுகளுக்கு முன் கடியாபட்டி தீ. சொ. குடும்பத்தார், கோவில் மேற்பார்வைக் காலத்தில் செய்யப் பெற்றதாகும். சென்னையிலேயே ஒரே வெள்ளி ரதம் எனப்பெயர் பெற்ற அது வேலைப்பாட்டிலும் செய் நேர்த்தியிலும் சிறந்ததாகும். சமீபத்தில் சில ஆண்டு முன் சென்னை கந்த கோட்டத்தில் ஒரு வெள்ளிரதம் செய்யப் பட்டிருக்கிறது.

மாசி மக உற்சவத்திற்கு முன் தைத்திங்களில் ஓர் நன்னாளில் சென்னையில் தொழில் புரிபவர்களெல்லாம் ஒன்றுகூடி அவரவர்கள் தொழில் வளமைக்கு ஏற்ப மகமை எழுதிப் பணம் எடுத்து விழாக் கொண்டாடி வருகிருர்கள். இப்போது மகமை வசூல் குறைந்து ஏலவசூல் பெருகி வருகிறது. பற்றுக்குறைக்கு பொது நிதியிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு பூசைச் செலவுகளைச் சரிக் கட்டி வருகிருர்கள்.

சுவாமி புறப்படும் போது ஜவுளித் தொழில் புரிந்த நம்மவர்கள் இரு சுவாமிகளுக்கும் பட்டுச் சாத்துவது வழக்கம். இப்போது சௌத் இந்தியா கார்ப்பரேஷன் நிறுவனத்தினர் பட்டுச் சார்த்தி வருகின்றனர்.

இவையன்னியில் சென்னை நகரத்தார் சார்பில் திருவொற்றியூர் கோவிலில் தினந்தோறும் இராக்காலக் கட்டளையும், திருத்தணியில் முருகனுக்கு காலை மாலை பால் அபிஷேகமும், உச்சிக் காலக் கட்டளையும், நடராஜப் பெருமானின் ஐந்து சபைகளில்

ஒன்றுன திருவாலங்காட்டில் ஆருத்ரா தரிசன உபயமும், சென்னை லிங்கிச்செட்டித் தெருவில் கோவில் கொண்டிருக்கும் மல்லீசுவரர் வசந்த உற்சவத்தில் ஐந்தாம் நாள் மண்டகப் படியும் நடைபெற்று வருகின்றன. திருத்தணியில் நகர விடுதியும், திருவாலங்காட்டில் ஒரு நகரவிடுதியும், திருவொற்றியூரில் பசு மடமும், திருப்போரூரில் ஒரு வீடும், சென்னையில் இரு கோவில்களுக்கும் வீடுகளும், நகர விடுதிகளும் உள்ளன. திருத்தணியில் ஆடிக்கார்த்திகை உற்சவத்தில் அன்னதானம் நடைபெற்று வருகிறது. முற்காலத்தில் திருத்தணியில் தினம் பிராமண போஜனமும் அன்னதானமும் நிகழ்ந்து வந்தது இப்போது குறைக்கப்பட்டிருக்கிறது.

பல ஆண்டுகளாக பழைய கோவில் தேவகோட்டை அள. சுப. பழ குடும்பத்தார், வி. கரு. சித. குடும்பத்தார், புதுக்கோவில் மு. சித. மு. குடும்பத்தார் மேற்பார்வையில் இருந்து வருகின்றன.

தகவல் தந்தவர்கள்: சௌத் இந்தியா கார்ப்பரேஷன் மேலாளர் கணபதிச் செட்டியார், மு. சித. மு. பாங்கில் பணிபுரியும் ராஜுச் செட்டியார், ரயான்டிரேடர்ஸில் பணியாற்றும் சிதம்பரம் செட்டியார்.

கட்டுரை வடிவம் :
எஸ். பி. எல். பழநியப்பா.

## மகவிழா நிகழ்ச்சி நிரல்

சாதாரண ஆண்டு மாசி மாதம் 23ந்தேதி (7—3—71) ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணிக்குத் திருவொற்றியூருக்கு சுவாமி எழுந்தருளல்.

24உ (8-3-71) திங்கட்கிழமை திருவொற்றியூரில் மகேஸ்வர பூசை.

25உ (9-3-71) செவ்வாய்க்கிழமை ஷ பூசை.

26உ (10-3-71) புதன்கிழமை மகேஸ்வர பூசை (மகிழடி சேவை).

27உ (11-3-71) வியாழக்கிழமை ஷயூரில் பூசை.

பகல் 3-மணிக்குத் திருவொற்றியூரிலிருந்து சென்னைக்கு எழுந்தருளல்.

---

## விழுப்புரத்தில் தை வெள்ளிவிழா

இந்நகர் காமராசர் வீதியில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ அமராவதி விநயகப் பெருமானுக்கு பிப்ரவரி பன்னிரண்டாம் நாள் ஐந்தாவது தை வெள்ளி உற்சவம் பல்வேறு சிறப்பு மிக்க கலை நிகழ்ச்சிகளுடன் நடைபெற்றது. இந்த உற்சவத்தினை விழுப்புரம் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மிகச் சிறப்பாக நடத்தினார்கள்.

---

சென்னை-14. நாவல் ஆர்ட் பிரிண்டர்சில் அச்சிடப்பெற்று
சேதுநிலையத்திற்காக வெளியிடுபவர் பழ. சேது ஆச்சி,
12, ராமாநுசம் தெரு, சென்னை-17. தமிழ்நாடு.
ஆசிரியர் புலவர் நாகசண்முகம்